## உங்கள் வதனம் இயற்கைப்பொலிவுடன் எழிலாய் விளங்க
## பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர்

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் உபயோகித்தால் உங்கள் வதனப்பொலிவு இயற்கை எழிலோடு வசீகரமாய் விளங்கும். இது திட்டுத்திட்டாகத் தெரியாமல் ஒரே சீராகப் படிந்து முகத்திலுள்ள மாசு மறுக்களை மறைத்து விடுகிறது. பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் பல இளம் நிறங்களில் கிடைக்கிறது. இது உங்கள் முக சருமத்தை மினுமினுப்பாக்கி நீடித்த நேரம் கவர்ச்சியுடனிருக்கச் செய்யும்.




**பாண்ட்ஸ்**
ட்ரீம்ஃப்ளவர்
ஃபேஸ் பவுடர்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. வில் இணைக்கப்பட்டது)

# கல்கி



# பொருளடக்கம்




குரோதி மாசி 10 ● ● ● ● ● ● பிப்ரவரி 21




சீன

கூட்டுச்சேராக் கொள்கை

இந்தியா

PK



மலர் 24 • இதழ் 30

# மெத்த வருந்துகிறோம்

‘இது இந்தியாதானா? பண்பு மிக்க பாரதத்தில் இப்படியும் நிகழலாமா?’ என்று துயருறுமாறும், திடுக்கிடுமாறும், வெட்கமுறுமாறும் நாட்டில் சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன.

கெய்ரோன் அவர்களும், அவரோடு காரில் பயணம் செய்தவர்களும் அநாகரிகமாக பயங்கர முறையில் படுகொலை செய்யப்பட்டதை அறிந்ததும் ‘நாம் இந்தியாவில்தான் இருக்கிறோமா?’ என்றே ஐயம் ஏற்பட்டது.

அதனையடுத்துச் சில தினங்களில் அமைதிக்கும் ஆழ்ந்த யோசனைக்கும் பெயர் பெற்ற நம் தமிழகத்திலேயே பண்பற்ற பயங்கரச் செயல்கள் நிகழ்ந்து விட்டன. சர்க்கார், போலீஸார், பொதுமக்கள், மாணவர் யாவருமே மிகையாகத் தீவிரம் காட்டி கோரங்களை விளைவித்து விட்டனர். ‘காலி’கள் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு புனிதமான போராட்டத்தைக் களங்கப்படுத்தி விட்டனர். பொருளாதாரச் சீர்குலைவினால் மனமுடைந்து போய்ப் பழி வாங்க எண்ணியவர்கள் அதிக்கிரமங்களில் இறங்கி விட்டனர். சீனர்களை எதிர்க்க வேண்டிய ராணுவத்தினர் தமிழ் நாட்டுக் கிளர்ச்சிக்காரர்களைச் ‘சமாளிப்பதற்காக’த் தருவிக்கப்பட்டிருப்பதும், குழந்தைகளை வெளியே அனுப்பவே ஒவ்வொரு குடும்பத்தினரும் பயப்படவேண்டியிருப்பதும் மிகவும் சோகமான சூழ்நிலையாகும். வெட்கப்படுவதும், வேதனைப்படுவதும் தவிர நாம் செய்யக் கூடிய ஒன்று பிரார்த்தனைதான். குறைந்தபட்சம் பத்து சிறு குழந்தைகள் துப்பாக்கிக்கு இரையாகி விட்டதாகத் தெரிகிறது. அவற்றின் நிர்மல ஆன்மாதான் பாபத்தைத் தணிக்க வேண்டும்.

தென்னாட்டில் நேர்ந்த இந்தப் பொருள் நஷ்டத்துக்கும், உயிர் நஷ்டத்துக்கும், மாணவர்களின் படிப்புக் கால நஷ்டத்துக்கும் சில மக்களின் நன்னடத்தை நஷ்டத்துக்கும் காரணம் சர்க்கார்தான். விவேகத்தின் குரல் ஆட்சியாளரின் செவிட்டுக் காதில் விழுந்தால் இனியேனும் விபரீதங்கள் நேராமல் காத்து விமோசனம் பெறலாம். ஆனால் அரசாங்கத்தின் காதில் அறிவின் குரல் எட்டுவதாகவே தெரியவில்லை. புனிதத் தமிழகத்தை மாசுபடுத்திய தடியடி, துப்பாக்கிப் பிரயோகம், தீவைத்தல் முதலியவற்றை விட அரசாங்கத்தின் மூடத்தனத்துக்குத்தான் அதிகம் வருந்துகிறோம். அதுவே மிக நீடித்த துன்பம் உண்டாக்கக் கூடியது.

பொருள் நஷ்டமும் உயிர் நஷ்டமும் ஏற்பட்ட குடும்பங்களுக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்களை அளிக்கிறோம். ஆனால் அந்த ஒருசில குடும்பங்கள் மட்டுமின்றித் தென்னகம் முழுவதையுமே தாழ்வுறச் செய்யும் ஹிந்தித் திட்டம் எதிர்காலத்தில் நம் இளைஞர்களையெல்லாம் இரண்டாந்தரக் குடிகளாக்கப் போகிறது. இவர்களுக்கு யார் ஆறுதலும் அநுதாபமும் கூறுவது?

மூடத்தனத்தில் நன்றாக ஊறிவிட்ட அரசாங்கத்துக்கு இன்னமும் பிரச்னையின் தீவிரத் தன்மையும், அதன் அடிப்படையில் பொதிந்துள்ள நியாயமும் புரியவில்லை. தில்லி அரசாங்கம் பிரச்னையைப் புரிந்து கொள்ளாததைவிட நம் ராஜ்ய சர்க்காரே நிலைமையை உள்ளபடி கிரகித்து, தீவிரமாகத் தீர்வு காண முற்படாததுதான் விபரீதமாகும்.



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா

— பாரதியார்

நிரந்தரமாக ஆங்கிலம் — ஹிந்தி இரண்டையும் நீடிப்பதற்குச் சாஸனத்தைத் திருத்த மத்திய சர்க்காருடன் முயலுவேன்' என்று ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் அபயஹஸ்தம் சாதிக்கிறார். ஹிந்தி பிரதான மொழியாகவும், போனால் போகிறதென்று ஆங்கிலம் கூட்டு மொழியாகவும் இருக்கும் இந்தத் திட்டத்தால் பட்சபாதம் எதுவும் குறையாது. மொழிபெயர்ப்புக்காக ஏற்படும் காலதாமதமும், இது காரணமாக ஹிந்திவாலாக்கள் மட்டும் பெரும் பட்டாளமாக மொழிபெயர்ப்பு இலாகாக்களில் இடம் பெறுவதும், அதற்காக நாம் வரிச் சுமையை அனுபவிப்பதும், ஒவ்வொரு அரசாங்கக் காரியாலயத்திலும் சிப்பந்திகள் இரு பகுதியாகப் பேதப்பட்டு நிற்பதும் தேசத்தின் சக்தியை அநாவசியமாக விரயமாக்கும்.

**காலவரையின்றி** ஆங்கிலம் நீடிக்க வேண்டும் என்று முன்பு சொன்னோம்; இப்போதோ **நிரந்தரமாக** ஹிந்தியுடன் ஆங்கிலமும் இருக்க வேண்டுமெனச் சொல்கிறோம்' என்று நம் முதன்மந்திரி பெருமைப்பட்டுக் கொள்கிறார். 'நிரந்தரம்' என்பதில் பெருமைக்கு இடமில்லை. குழப்பமும், காலதாமதமும், வரிப் பணத்தின் விரயமும், பேத உணர்ச்சிகளும் நிரந்தரமாக நிலவுவதற்குத்தான் இந்த நிரந்தரத் திட்டம் அடிகோலும். இது வரை இருந்தது போல் ஆங்கிலம் மட்டுமே மத்திய சர்க்காரின் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்பது ஒன்றுதான் பிரச்னைக்கு நியாயமான தீர்வாகும்.

தமிழக முதன் மந்திரியின் 'நிரந்தர' இரு மொழித் திட்டம் உதவாது என்பதே நம் கருத்து. ஆனால் மத்திய சர்க்காரோ இந்த அளவுக்குக்கூட விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. சென்னையிலும், தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும் விபரீத சம்பவங்கள் நேர்ந்த பின்னும்கூடப் பிரதமர் லால்பஹாதூர் அவர்கள் பழைய தோரணையிலேயே வானொலியில் பேசுகிறார். சட்டபூர்வமாக எதுவும் செய்ய மனமின்றி மீண்டும் 'வாக்குறுதி' அளிக்கிறார். எத்தனையோ வாக்குறுதிகள் காற்றில் பறந்ததைக் கண்ட நாம், இவரை எப்படி நம்புவது?

ஹிந்திக்கு மத்திய சர்க்காரில் இடமளிக்கும் திட்டம் சமநீதியை அழிக்கும் திட்டம். மற்ற மொழிக்காரர்களைவிட ஒரு மொழியினர் சலுகை பெறும்போதே ஜனநாயகத்தின் உயிர்நாடி சிதைந்து போகிறது. ஜனநாயக விரோதமான இத் திட்டத்தை அமுலாக்கும் பிரதமர், கிளர்ச்சி செய்பவர்கள் ஜனநாயகப் பண்பைக் கைவிட்டதாகச் சாடுவது விநோதம். 'ஹிந்தி வழங்காத ராஜ்யங்கள் மத்திய சர்க்காருடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளலாம்' எனப் பிரதமர் கூறினார். ஆனால் இப்போதே தமிழ்நாட்டுக்கு மத்திய சர்க்காரிலிருந்து ஹிந்தி அறிக்கைகள் (ஆங்கில மொழிபெயர்ப்பு இல்லாமல்) வரத் தொடங்கி விட்டன. ஒரு பார்லிமென்ட் அங்கத்தினரும் சங்கீத வித்துவானும் ஹிந்திக் கடிதங்களை வைத்துக் கொண்டு பொருள் தெரியாமல் திகைக்கிறார்கள்.

உத்தியோக வாய்ப்புக்கள், சர்க்கார் பரீட்சைகள் இவற்றில் ஹிந்தியர் விசேஷ அநுகூலம் பெறப் போவதையும் பிரதமர் ஊர்ஜிதம் செய்துவிட்டார்! தன்மானம் மிக்க மாணவர்கள் 'மாடரேஷன்' என்ற பெயரில் சலுகையோ, தயவோ, பிச்சையோ பெற விரும்பவில்லை. தங்களுடைய பிறப்புரிமையான சம நீதியைத்தான் கோருகிறார்கள். தகுதி ஒன்றைக் கொண்டே தேர்வளிக்க வேண்டுமென்றுதான் விரும்புகிறார்கள்.

'ஹிந்தித் திணிப்பால் தமிழகத்தில் நேர்ந்தது போலவே, ஹிந்தி அமுலாகாவிடில் வடக்கே கலவரம் நிகழும்' என்று சிலர் கூறுகிறார்கள். அரசாங்கம் நீதிக்காகத்தான் ஏற்பட்டது; ஆர்ப்பாட்டத்துக்கு அஞ்சி நீதியைக் கைவிடும் சர்க்கார், பதவி வகிக்கத் தகுதியற்றது. வடஇந்தியருக்குப் பயப்படாமல் நியாயத்தைத் தெளிவுபடுத்திக் கலவரம் நிகழாமல் அவர்களை அமைதியுறச் செய்வதே ஆட்சித் தலைவர்களின் பொறுப்பு. 'தற்போதைய நடைமுறையை நீடிக்க வேண்டும் என்றுதான் ஹிந்தி பேசாத மக்கள் கோருகிறார்களேயன்றிப் புதிதாக ஆங்கிலத்தைக் கொண்டு வரச் சொல்லவில்லை; நடைமுறையை நீடிப்பதால் ஹிந்தியருக்கு எந்தப் பிரதிகூலமும் இல்லை; ஆட்சி மொழியாக வரப் போகும் ஹிந்தி ஹிந்தியரிலேயே பலருக்கு விளங்காது; அதை ஒரு புதிய மொழியாகத்தான் அவர்களும் பயில வேண்டும்; ஆங்கிலத்தின் வளர்ச்சியை ஹிந்தி நிச்சயமாகப் பெறவில்லை; ஹிந்தி ஒரு சுதேச மொழி என்ற வாதத்துக்காகத் தென்னக மக்கள் தேச வாழ்வில் தாழ்ந்து நிற்க விரும்பவில்லை; ஆங்கிலம் நாடுமுழுவதற்கும் பொதுவாக இருக்க, ஹிந்தியோ ஆயிரம் லட்சம் மக்களுக்கு மிக மிக அந்நியமாக இருக்கிறது' என்பதையெல்லாம் ஹிந்தியருக்கு ஆட்சியாளர்கள் எடுத்துக் காட்ட வேண்டும். ஹிந்திப்பகுதிகளிலும் கூட ஆங்கிலத்தை அடியோடு அகற்றும் எண்ணம் ஆட்சித் தலைவர்களுக்கு இல்லை. ஸயன்ஸுக்காகவும், வெளியுலகத் தொடர்புக்காகவும் ஆங்கிலம் எப்படியும் நீடிக்கத்தான் வேண்டும் என வட இந்தியத் தலைவர்களே கூறுகிறார்கள். எனவே ஆங்கிலம் மத்திய சர்க்கார் மொழியாக நீடிப்பதை ஹிந்தியர் எதிர்ப்பதில் எந்த நியாயமும் இல்லை. தங்கள் ராஜ்யங்களில் ஹிந்தியில் நிர்வாகம் நடத்திக் கொள்வதற்கும், மற்ற ஹிந்தி ராஜ்யங்களுக்கிடையே ஹிந்தியில் தொடர்பு கொள்வதற்கும் அதிகமாக அவர்கள் ஹிந்திக்குப் பிரத்தியேக அந்தஸ்து எதிர்பார்ப்பது நியாயமல்ல என்பதைத் தெளிவாக்க வேண்டும்.

தென்னக மக்களின் 'தப்பபிப்ராயத்தைத் தெளிவு' செய்வதாகச் சொல்லும் பிரதமர், அவர்களின் நியாயமான எதிர்ப்பைப் புரிந்து கொள்ளாமல் தப்பபிப்பிராயம் கொண்டுள்ள தம்மையே முதலில் தெளிவு செய்து கொள்ள வேண்டும். ஹிந்தி பேசாதவர்களுக்கு அவர் உபதேசித்ததும், 'வாக்குறுதி' தந்ததும் இதோடு போதும். இனி அவர் ஆட்சி மொழிச் சட்டத்தைத் திருத்தி, ஆங்கிலத்தையே மத்திய ஆட்சி மொழியாக நீடிக்கச் செய்து, அதன் நியாயத்தை வட இந்தியருக்கு விளக்க வேண்டியதே விவேகம்

காட்டும் வழி. விவேகம் காட்டும் வழியிலேயே நமது மாணவர்களும், பொதுமக்களும் செல்ல வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறோம்.

இந்தக் கலவரங்கள் அச்சேறும் தறுவாயில் மாணவர்கள் போராட்டத்தை நிறுத்தி வைத்து விட்டதாக நற்செய்தி கிடைத்துள்ளது. எவ்வளவோ மன வருத்தத்துக்கிடையில் மகிழ்ச்சிக்குரிய இம் முடிவு வெளியாகியிருக்கிறது. மாணவர்கள் கிளர்ச்சியை நிறுத்தி வைத்து விட்டதால் கிளர்ச்சியைப் பயன் படுத்திக் கொண்டு மற்றவர்கள் செய்த கோர காரியங்களும், போலீஸின் துப்பாக்கிப் பிரயோகங்களும் முடிவடையும் என நம்புகிறோம்.

அன்பும், பண்பும், அடக்கமும் மிக்க தமிழ் மக்கள் இனி அராஜகங்களில் இறங்கும் காலிகளுக்கு இடம் தரலாகாது. அன்பு வழியிலும் அஹிம்சை வழியிலும் சாதிக்க வேண்டிய காரியத்தைக் கொடூரங்களால் சாதிக்க முடியாது. பலாத்காரத்துக்குப் பணிவது போல் தருமத்துக்குக் காங்கிரஸ் சர்க்கார் கட்டுப்படுவதில்லை என்பது பல முறையும் நிரூபணமான உண்மைதான். ஆனால் அது அரசாங்கத்தின் அவக்கேடான நிலையைக் காட்டுகிறது. அதற்கு ஈடாக மக்களும் வெட்கக் கேடான வழிகளைப் பின்பற்றலாகாது. சட்ட ரீதியில் எதிர்ப்பைத் தெரிவிப்பதோடு தணிந்துவிட வேண்டும். அமைதியான முறையில் எதிர்ப்பைத் தெரிவிக்கும் ஜனநாயக வாய்ப்பு இரண்டே ஆண்டுகளில் வருகிறது. 1967ம் ஆண்டுப் பொதுத் தேர்தலில் எவ்வித பலாத்காரமும் பயங்கரமும் இன்றியே காங்கிரஸைத் தொலைத்துத் தலை முழுக மக்களுக்கு வாய்ப்புள்ளது. எனவே இப்போது தருமத்துக்குக் கட்டுப்பட்டுத் தமிழ்க் குலம் நெடுங்காலமாகப் பெற்றுள்ள நற்பெயரைக் காத்துத் தரவேண்டியதே நம் மக்களின் கடமை.

# பாராட்டுகிறோம்!

மத்திய மந்திரிகளான திரு சுப்பிரமணியம் அவர்களும் திரு அளகேசன் அவர்களும் தென்னக மக்கள் அனைவரின் பாராட்டுக்கும் உரியவராகியுள்ளனர். பதவியின் சக்தி பதவியைத் துறப்பதில்தான் இருக்கிறது. துணிவுடன் மனச்சாட்சிக்கு மதிப்புத் தந்த முன்னாள் மந்திரிகளை வாழ்த்துகிறோம்.

ஆனால் ஒன்று எடுத்துக்காட்ட வேண்டியது அவசியம். தமிழகத்தைச் சேர்ந்த இவ்விரு மந்திரிகளும் 'ஆங்கிலம் மத்திய மொழியாக இருக்க வேண்டும்; அதன் ஸ்தானத்தில் ஹிந்தியை அமர்த்தக் கூடாது' என்று கோரவில்லை. 'இரு மொழிகளும் இருக்க வேண்டும்' என்று அரசாங்கமே அளிக்கும் வாக்குறுதியை நிரந்தரச் சட்டமாக இயற்ற வேண்டும் என்றுதான் கோரினார்கள். ஆனால் இவ்வி தர்பார் இதற்குக்கூட இணங்கவில்லை. 'வாக்குறுதி' காரிய ரீதியில் அமுலாகாது என்பதே இதன் பொருள்.

இவ்விரு மந்திரிகளின் ராஜிநாமா மற்ற எல்லா கோர கலவரங்களையும் விடப் பளிச்சென்று மத்திய சர்க்காரின் ஹிந்தித் திணிப்பு மோசத்தையும் சூழ்ச்சியையும் எடுத்துக் காட்டிவிட்டது. இனிமேலும் நமது ராஜ்ய மந்திரிகளும், காங்கிரஸ் அங்கத்தினர்களும் பத்திரிகைகளும் விஷயத்தை மழுப்பாமல் தைரியமாக ஹிந்தி மொழித் திட்டத்தை எதிர்க்க வேண்டும். சென்னை முதன்மந்திரி உள்பட மற்ற தென்னாட்டுத் தலைவர்களும் திரு சுப்பிரமணியத்தின் வழியைப் பின்பற்றி ஒரு மொத்தமாகப் பதவி துறந்தால் நிச்சயமாக நற்பயன் ஏற்படும்.

## தருமபுரி வாக்காளர்களுக்கு
## ராஜாஜியின் எச்சரிக்கையும் வேண்டுகோளும்

ஹிந்தி என்ற விலங்கில் தமிழ் நாடு அகப்படாமல் காப்பாற்றும் வாய்ப்பு தருமபுரி வாக்காளர்களுக்கு இப்போது கிடைத்திருக்கிறது. திரு காமராஜ் அவர்களுடைய சமீப காலப் போக்கைக் கண்டு அவர் மாறிவிட்டாரோ என்று தருமபுரித் தொகுதி வாக்காளர்கள் ஏமாறக் கூடாது என்பதே என் வேண்டுகோள். தம்முடைய அந்தஸ்தையும் செல்வாக்கையும் கொண்டு தமிழ் நாட்டுக்கு ஹிந்தியால் அபாயம் ஏற்படாமல் தடுக்கலாம் என்று திரு காமராஜ் எண்ணுகிறார். வடக்கே உள்ள நிலைமையை அவர் புரிந்து கொள்ளவில்லை. தருமபுரி வாக்காளர்கள் காங்கிரஸ் அபேட்சகருக்குப் படுதோல்வி அளித்தாலொழிய, ஆங்கிலத்துக்குப் பதில் ஹிந்தியை ஆட்சிமொழியாக்கும் திட்டத்துக்கு இங்கு எவ்வளவு பலமான எதிர்ப்பு உள்ளது என்பதை மத்திய காங்கிரஸ் நிர்வாகிகள் உணர மாட்டார்கள். ஒரு கலயம் கூழுக்காக நம்முடைய பரம்பரை உரிமையை விற்காதிருப்போமாக. தருமபுரித் தொகுதியிலுள்ள பரம ஏழையும் லஞ்சத்தையும் சபல மயக்கத்தையும் தூவென்று தள்ளி, தி. மு. க. அபேட்சகருக்கே தனது வாக்கை அளிப்பதெனத் திடமாக உறுதி கொண்டு இந்தத் தீர்மானத்தைத் தேர்தல் தினத்தன்று நிறைவேற்றிக் காட்ட வேண்டும் என்பதே என் வேண்டுகோள். தருமபுரி அவ்வாறு செய்து காட்டும் என்று நம்புகிறேன். தருமபுரித் தொகுதியின் இடைத் தேர்தல் மிகவும் முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. அங்கு காங்கிரஸ் அபேட்சகர் அடையும் தோல்வியே நம் ஆட்சி மொழிப் போராட்டத்தை வெற்றிக்கு அழைத்துச் செல்லும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி



# ராஜாஜியின் கருத்துக்கள்

கேரளத்திலுள்ள நெத்தூரிலிருந்து எனக்குப் பின்வருமாறு ஒரு கடிதம் வந்துள்ளது :

''...... ஹிந்தியைப் பெரிதும் ஆதரிக்கும் பிரதமரும், உள் விவகார மந்திரியும் தென்னாட்டின் எதிர்ப்புக் குரலுக்குக் காது கொடுப்பார்கள் என்று தோன்றவில்லை. எனவே, இப்போது அவர்கள் கொள்கையை மாற்றிக் கொள்ளுமாறு கட்டாயப்படுத்தும் ஒரே உபாயம் உங்களுடைய தலையீட்டில்தான் உள்ளது என்று கருதுகிறேன். இன்றைய நெருக்கடி நிலையில், ஆட்சி மொழி சம்பந்தப்பட்ட சாஸன ஷரத்துக்களை அமுல் செய்யாமல் நிறுத்தி வைக்க வேண்டுமென நீங்கள் 'உயிர் போகும் வரை உண்ணாவிரதம்' தொடங்கினால் அதற்கு விரும்பிய பலன் கிட்டாமல் போகாது. உங்களுடைய வயோதிகத்தில் இத்தகைய ஒரு கடும் சோதனையை ஏற்கச் சொல்வது கொடுமையாகும் என்பதை நான் நன்கு உணர்கிறேன். எனினும் வேறு மாற்றுத் திட்டம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. நீங்கள் ஒருவரே பிரச்னையைத் தீர்த்துக் காப்பாற்ற முடியும். எனவே, இந்தக் கருத்துக்கு நீங்கள் தகுந்த நிர்க்காலோசனை அளிப்பீர்களென நம்புகிறேன்.''

இதற்கு நான் எழுதிய பதில் கடிதம் எழுதியவருக்குப் போய்ச் சேரவில்லை. ஏனெனில், மேற்படி கடிதம் எழுதியவர் கொடுத்திருந்த விலாசத்தில் அவரைப்பற்றித் தகவல் இல்லை. என்னுடைய பதில் வருமாறு:

''உங்கள் கடிதம் கிடைத்தது. உங்களுடைய கடுபாட்டைப் பாராட்டுகிறேன். எனினும், உண்ணாவிரதங்கள் (காலவரம்பு இருப்பினும் சரி, உயிர் போகும் வரை இருப்பினும் சரி) பிறர் தூண்டுதலின் மீது மேற்கொள்ளப்படுவதில்லை. இது போன்ற தவ விரதங்கள் ஒருவரின் அந்தரங்கமான உந்தலின் மீதுதான் உருவாக வேண்டுமேயன்றி, வெளித் தூண்டுதலின் மேல் அல்ல. உண்ணாவிரதங்கள் வெறும் அரசியல் தந்திரமல்ல. அவை ஒரு பிரச்னை குறித்து ஒருவரின் அந்தராத்மாவில் எழுகிற எதிர் விளைவுகளாகும். ஆனபடியால் நீங்கள் கேட்டு நான் உண்ணாவிரதமிருப்பதென்பது, இதுபோன்ற நோக்கங்களுக்காக மேற்கொள்ளப்படும் உண்ணாவிரதக் கருத்துக்கே ஒவ்வாது.''

***

போலீஸார், மாணவர் இரு சாராருமே பல இடங்களில் அத்து மீறி விட்டதாகத் தெரிகிறது. ஆனால் போலீஸார் மீதோ மாணவர் மீதோ குற்றம் சாட்டித் தண்டிப்பது முறையல்ல.

***

அத்துமீறிய செயல்களுக்குத் தூண்டிவிட்ட குற்றவாளி டில்லி சர்க்கார்தான். எனவே, தண்டனை பெற வேண்டிய ஒரே குற்றவாளி காங்கிரஸ் அரசாங்கம்தான். அதற்குத் தர வேண்டிய தண்டனை தேர்தலில் தோல்வி அளிப்பதுதான்.

***

ஆள்கிற கட்சியின் நிர்ப்பந்தத்தினால்தான் போலீஸார் அதிக்கிரமம் செய்ய நேரிட்டிருக்குமேயன்றிப் போலீஸ் இலாகாவைக் குற்றம் சொல்வதற்கில்லை. சர்க்கார் இலாகாக்களில் இன்றளவும் நேர்மையாக இருப்பது போலீஸ் ஒன்றுதான். பெர்மிட்—லைசென்ஸ் போன்ற சலுகைகள் எதுவும் போலீஸ் இலாகா வழங்குவதற்கில்லையாதலால் அந்த இலாகா தூய்மையாகவே இருந்து வருகிறது. பொதுவாக நமது போலீஸார் நல்ல பெயர் வாங்கி இருப்பதோடு என்னுடைய நேரடி அநுபவத்திலேயே அவர்களுடைய நேர்மையை அறிவேன். ஆனபடியால் போலீஸின் மீது குற்றம் சாட்டுவதற்கில்லை.

மாணவர் மேல் நடவடிக்கை எடுப்பது ஆள்கிற கட்சியின் நலனையே பாதிக்கும். என் வயதை அடையும் வரையில் மாணவர்கள் தங்கள்மீது எடுத்த நடவடிக்கையை மறக்க மாட்டார்கள். முதலில் மாணவர்களைக் கண்டனம் செய்து விட்டுப் பின்னர் நடவடிக்கை எடுக்காமலிருப்பது கௌரவக் குறைவு என்று சர்க்கார் கருதினால், ''வயதான வேறு சிலர் தூண்டி விட்டுத்தான் மாணவர்கள் கிளர்ச்சி செய்தார்கள். எனவே, கிளர்ச்சிக்கு அவர்கள் பொறுப்பில்லை'' என்ற **பொய்க் காரணத்தைக் கூறியேனும்** மாணவரை விட்டுவிட வேண்டும்.

***

மாணவர்களை வேறு யாரும் தூண்டிவிடவில்லை. மாணவர்கள் வாக்காளர்களைப் போல விஷயஞானமற்றவர்களல்ல; ஏமாறக் கூடியவர்களும் அல்ல. ஹிந்தித் திட்டம் தங்கள் எதிர்காலத்தைப் பாதிக்கும் என்று நன்கு உணர்ந்ததால் தாமாகவே அவர்கள் எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார்கள். நான் உள்பட பல முதியவர்கள் பல ஆண்டுகளாகச் சொல்லி வந்ததற்கெல்லாம் மேலாக மாணவரின் கிளர்ச்சி உடனடியாக நல்ல பலனை உண்டாக்கியுள்ளது. ஹிந்தியர்களின்

கெட்டியான மண்டை ஓட்டையும் மாணவரின் வாதம் துளைத்துக்கொண்டு சென்றுவிட்டது. தமிழ் நாட்டின் முன்னாள் முதன் மந்திரி, இன்றைய முதன்மந்திரி, வருங்கால முதன் மந்திரி ஆகியோரும் சிறிது தைரியமாகப் பேசத் தொடங்கி யிருக்கிறார்கள். எனவே, மாணவர்கள் போராட்டத்தை இனி நிறுத்தி விட வேண்டும். போராட்டத்தை நிறுத்தி வைத்த காலத்திலும் மாணவர்கள் 'ஐக்கியம்' என்ற வெடிமருந்தை ஈரம் படியாமல் காக்க வேண்டும். 'உங்கள் சார்பில் நாங்கள் இருக்கிறோம்' என்று காங்கிரஸ்காரர்கள் பொய்க் கண்ணீர் உகுத்து வெடி மருந்தை ஈரப்படுத்த முயல்வார்கள். மாணவர்களின் ஐக்கியத்தைக் குலைக்க முயற்சி செய்வார்கள். மாணவர்கள் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்.

***

வயதானவர்களைவிட மாணவர்கள் புத்திசாலித்தனமாக நடந்துகொண்டிருக்கிறார்கள். ஸ்ரீ கே. சந்தானம், ஸ்ரீ வி. சுப்பிரமணியம் ஆகியோரோடு நானும் ஒரு சமயத்தில் ஆங்கிலம், ஹிந்தி இரண்டும் இடம் பெறும் இரு மொழிக் கொள்கையை ஆதரித்திருக்கிறேன். ஆனால் பிறகு இது நடைமுறைக்கு ஒத்து வராது என்று தெரிந்து கொண்டேன். ஒவ்வொரு சர்க்கார் காரியாலயத்திலும் இரண்டு கட்சியாகச் சிப்பந்திகள் பிரிந்து நிற்பார்கள். ஹிந்தி யறிந்த குமாஸ்தா ஒருவர் அம்மொழியில் தஸ்தாவேஜிக் குறிப்பு எழுதி வைத்து ஹிந்தி அறியாத மேல் அதிகாரிக்குத் தொந்தரவு தர முடியும். இப்போதே பாருங்கள்! ஸ்ரீ சுப்பிரமணியம் அவர்கள் அறியாமலே மத்திய உணவு மந்திரி இலாகா 'இனி எல்லாக் காரியங்களும் ஹிந்தியில் நடக்கும்' என்று உத்தரவு பிறப்பித்து விட்டது! இரு மொழித் திட்டம் அமுலானாலும் இதே நிலைமைதான் எல்லா ஆபீசுகளிலும் நிலவும். இதை மாணவர்கள் புரிந்து கொண்டு இரு மொழிக் கொள்கையை எதிர்ப்பது பாராட்டுக்குரியது.

இதே போல் 'காலவரம்பு' பற்றிய பேச்சுக்களையும் மாணவர்கள் ஒப்புக் கொள்ளாதது அவர்களுடைய புத்திசாலித்தனத்தைக் காட்டுகிறது. எத்தனை வருஷங்களானாலும், என்றேனும் ஒரு நாள் ஹிந்தி வந்தே தீர வேண்டுமென ஒப்புக் கொண்டால் அதற்கு இப்போதே ஆரம்பம் செய்து விடுவார்கள். ஹிந்தியை உடனடியாகத் திணிக்காமல், வெறுமனே ஒத்திப் போடும் திட்டம் ஒரேயடியாக அங்கத்தை வெட்டி எறிவதற்குப் பதில் ரம்பத்தால் சிறுகச் சிறுகச் சித்திரவதை செய்வது போலவே ஆகும். நாடு முழுவதற்கும் பொதுவான ஆங்கிலமே இன்று போல் மத்திய சர்க்காரின் ஆட்சி மொழியாக நீடிக்க வேண்டும் என்பதொன்றே நியாயமான ஏற்பாடு. இதை மாணவர்கள் புரிந்து கொண்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

***

அல்னஸ்கர் என்ற பீங்கான் வியாபாரி பகற்கனவு கண்டதாக ஒரு கதை உண்டு. தனக்குப் பெரிய செல்வம் கிடைத்ததாகவும், பெரும் தனிகரின் மகளை மணந்துகொண்டு அவளை அடக்கி யொடுக்கி வைத்திருந்ததாகவும், அவள் தன் பேச்சைக் கேட்காத போது எட்டி உதைத்ததாகவும் அல்னஸ்கர் கனவு கண்டான். கனவு நிலையின் உற்சாகத்தில் தான் வியாபாரம் செய்யும் பீங்கான் பண்டங்களை உதைத்து விட்டான். அவை நொறுங்கி விழுந்த ஓசையில் விழித்துக் கொண்டான் என்று கதை.

ஆள்கிற கட்சியினரும் அல்னஸ்கர்போல் தான் பகற்கனவு காண்கிறார்கள். ஐந்தாண்டுத் திட்டங்கள் யாவும் பீங்கான் பண்டம் போலத்தான். ஆனால் கனவு கண்ட அல்னஸ்கர் விழித்துக் கொண்டான். காங்கிரஸ் சர்க்காரோ விழித்துக் கொள்கிற வழியாக இல்லை. எனவே நாம்தான் காங்கிரஸ் அல்னஸ்கரையும் பீங்கான் திட்டங்களோடு சேர்த்து ஒதுக்கித் தள்ள வேண்டும்.

***

விவாக விதிகளிலேயே அவசியம் ஏற்பட்டால் விவாகரத்து செய்து கொள்ளவும் ஒருவிதி உண்டு. அதனால் விவாகமானவுடன் விவாகரத்து செய்துகொள்வார்களா? இது போலத்தான் அரசியல் சாஸனம் இயற்றும் போதே, அவசியமானால் அதன் ஷரத்துக்களை மாற்றவும் பார்லிமெண்டுக்கு உரிமை தரப்பட்டது. இதைப் பயன்படுத்திக் கொண்டு காங்கிரஸ் சர்க்கார் சாஸனத்தை மனம் போனபடியெல்லாம் மாற்றி விட்டது. அரசியல் சாஸனத்தைக் கலியாணம் செய்து கொண்ட அரசாங்கம் 'ஹனிமூன்' முடியு முன்பே விவாகரத்து செய்துகொள்ளத் தொடங்கிவிட்டது. சாஸனத்தின் ஆரம்பத்திலேயே அடிப்படை உரிமைகள் என்று வகுக்கப்பட்ட ஷரத்துக்களைக் காங்கிரஸ் ஆட்சி மாற்றி விட்டது. 'உரிமைகள்' என்றுமட்டும் கூறாமல் 'அடிப்படை உரிமைகள்' என்று அடைமொழி கொடுத்திருப்பதே அவை மாற்றக்கூடாதவை என்பதைத் தெளிவாக்குகிறது. சாஸனத்தை எரிப்பது பற்றிச் சிலர் பேசுகிறார்கள். சாஸனத்தை ஏற்கனவே சர்க்கார் எரித்தாகி விட்டது என்று நான் கருதுகிறேன். தற்போது இருப்பது சாஸனம் எரிந்தபின் தங்கிய புனித விபூதிதான்.

***

பலாத்காரச் செயல்கள் யாவும் கண்டனத்துக்குரியவை. ஆனால் இவ்வாறு பலாத்காரம் நிகழக் காரணம் என்னவென்றுயோசித்துப் பார்க்க வேண்டும். நீதி வழங்குவதில் காலதாமதம் செய்வதே மக்களின் பலாத்காரச் செயலுக்குத் தூண்டுகோலாகி விடுகிறது. ஆட்சி மொழி விஷயத்தில் மட்டுமின்றிக் கெய்ரோன் கொலைக்கும் இதுவே பொருந்தும். காங்கிரஸ் முக்கியஸ்தர்களைக் குறித்த ஊழல்களை விசாரிப்பதில் தனிச் சலுகை காட்டுவதும், விசாரணையை மிகவும் காலம்தாழ்த்துவதும் மக்களில் சிலரின் ஆத்திரத்தைத் தூண்டி விடுவது இயற்கை.



கனவான்கள் தேர்ந்தெடுப்பது

# மபத்லால் க்ரூப்

பாப்லின்கள் மற்றும் ஷர்ட்டிங்குகள்

நியு ஷராக் (ஷராக்) அஹமதாபாத் . நியு ஷராக், நடியாத் . ஸ்டேண்டர்ட், பம்பாய்
ஸ்டேண்டர்ட் (நியு சைனா) பம்பாய் . ஸ்டேண்டர்ட், தேவாஸ், ஸாஸுன் பம்பாய்
ஸாஸுன் (நியு யூனியன்) பம்பாய் . ஸூரத் காட்டன், ஸூரத் . மபத்லால் பைன், நவ்ஸாரி

Aiyars MGSP 623 TM

# முரண்பாடு

இன்றைய பயங்கரமான ஆட்சி மொழிச் சர்ச்சைக்கும் 25 வருஷங்களுக்குமுன் ராஜாஜி என்ன கூறினர் என்பதற்கும் இம்மிகூடச் சம்பந்தம் இல்லை. ஒருவகை மீன்கள் (Cuttlefish) தம்மை எதிரிகள் தொடர்ந்து வந்தால் தம் உடம்பிலிருந்து கரிய மையைச் சுரந்து நீரை இருட்டாக்கி எதிரியைக் குழம்பிப் போகச் செய்யுமாம். அதுபோல இன்று நிகழ்கால அவசரப் பிரச்னைகளைக் குழப்புவதற்காகத் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர்கள் ராஜாஜி 1939ல் வெளியிட்ட கருத்துக்களைச் சுட்டிக் காட்டுகிறார்கள். (அந்தக் கருத்துக்களை அவர் கைவிட்டு எவ்வளவோ காலமாகிவிட்டது.) ஒரே கருத்தைப் பிடித்துக் கொண்டிருப்பது கழுதைக் குணம். அறுபது வயதான ஒரு மனிதர் தாம் இருபது வயதில் கொண்டிருந்த கொள்கையையே பிடித்துக்கொண்டிருந்தால் — பல ஆண்டுகளுக்கு முன் கடைப்பிடித்த கொள்கையை ஒருபோதும் கைவிடக் கூடாது என்ற ஒரே காரணத்துக்காகப் பிடித்துக் கொண்டிருந்தால் — அவர் தம்மை ஒரு கழுதையாகவே நிரூபித்துக் கொள்கிறார். ராஜாஜி இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் கொண்டிருந்த கருத்தை இப்பொழுது முற்றிலும் மாற்றிக் கொண்டிருக்கிறார் என்பது அதிசயமல்ல. நமது பிரதம மந்திரி ஒரே சமயத்திலேயே, ஒரே வாக்கியத்திலேயே இரு துருவங்களாக இருக்கும் இரு வேறு கருத்துக்களை வெளியிடப் பயின்றிருப்பதுதான் நமக்குப் பேர் அதிசயமாக இருக்கிறது. ஒரு பொதுக் கூட்டத்தில் பேசுகையில் அவர் வட இந்தியாவை நோக்கித் தலையை வளைக்கிறார். 'ஆங்கிலத்திலிருந்து ஹிந்திக்கு மாறுவதை விரைவுபடுத்த வேண்டும்' என்கிறார். உடனே சிறிதுகூட நிறுத்தாமல், தென்னிந்தியாவை நோக்கித் தலையை வளைத்து, 'தென்னிந்தியா எவ்வளவு காலம் விரும்புகிறதோ அதுவரையில் ஆங்கிலமே நீடிக்கும்' என்று வாக்குறுதி தருகிறார். ஆட்சிமொழி மகாநாடு ஒன்றை அவர் தொடங்கி வைக்கிறார்: '1965 ஜனவரி 26ந் தேதியன்றே ஆங்கிலத்தின் இடத்தை ஹிந்தி பூரணமாகப் பெற்றிருக்க வேண்டும்' என்று மக்களுக்கு நினைவூட்டுகிறார். 'மக்களில் பெரும்பாலோர் பேசும் மொழிதான் தேசத்தின் தொடர்பு மொழியாக இருக்க வேண்டும்' என்கிறார். 'ஹிந்தியை உபயோகிப்பதற்கு ஊக்கமளிக்க வேண்டும்; எவ்வளவு வேகமாக முடியுமோ, அவ்வளவு வேகமாக அம்மொழியைப் பரப்ப வேண்டும்' என்கிறார். அதே சமயத்தில், அதே மகாநாட்டில் அவர், 'நம்முடைய ஐக்கியத்தை அது பாதிக்குமாயின் மொழி மாற்றத்தின் வேகத்தைத் தணிக்க வேண்டும்' என்றும் தென்னிந்தியர்களுக்கு வாக்குறுதி அளிக்கிறார். இப்பேர்ப்பட்ட மிகோன்னதமான முரண்பாட்டைக் கண்டு வட இந்தியர், தென்னிந்தியர் இரு சாராருமே திகைத்துச் சலித்து நிற்பதில் நியாயமுண்டு. இன்னொரு விஷயத்தையும் இங்கே கூறிவிடுவோம்: தவற்றைத் தடுக்க முற்பட்டுள்ளவர்களிடம் ஐக்கியம், அமைதி இவை குறித்துப் பிரதமர் பேச வேண்டியதில்லை; தவற்றைத் திணிக்க முற்பட்டவர்களுக்கே அவர் நல்லுரை கூற வேண்டும்.

'நீங்கள் சொல்வது என்ன என்பது முக்கியமல்ல; நீங்கள் செய்வது என்ன என்பதே முக்கியம்' என்று தென்னாட்டில் விழித்தெழுந்துள்ள மக்கள், சம்பந்தப்பட்ட தலைவர்களிடம் கூறினால் அம்மக்களைக் குறை கூறுவதற்கில்லை. இந்தப் பிரச்னையில் சாட்சாத் நேருஜி மீண்டும் மீண்டும் அளித்த வாக்குறுதிகளே பயனற்றுப் போயின. அவர் அளித்த பொது வாக்குறுதிகள் யாவும் காலக்கிரமத்தில் அவரது 'பிரத்தியேகக் கருத்துக்கள்' என்ற பெயரில் இலேசாக்கப்பட்டன. செய்தி — வானொலி மந்திராலயம் ஏற்பாடு செய்த காரியங்களைப் பார்ப்போமாயின், லால்பஹதூர் அவர்களும் நந்தா அவர்களும் தரும் வாக்குறுதிகள் கால் காசுக்குக்கூடப் பயனில்லை. பிரத்தியட்ச நிலை என்னவெனில், இந்தியாவின் நாற்திசைகளிலும் பரவியுள்ள எல்லா இந்தியர்களின் தொண்டையுள்ளும் ஹிந்தியைத் திணிக்கப் போகிறார்கள். அபாயகரமான விளைவு நேரினும் இவ்வாறு ஹிந்தியைத் திணிப்பதற்கு ஆள்கிற கட்சி எவ்வளவோ நல்ல காரணங்களைக் காட்டலாம்; பொல்லாத காரணங்களையும் காட்டலாம். எப்படியாயினும் அவ்வாறு ஹிந்தியைத் திணிக்கும் உத்தேசத்தைப் பகிரங்கமாக வெளியிடும் நேர்மை அக்கட்சிக்கு இருக்க வேண்டும். அதுவும் தற்போது உத்தேசத்தை வாஸ்தவமாகவே அமுலாக்கத் தொடங்கியானபின் இந்த நேர்மை மேலும் அவசியமாகும்.

> **பிரதமர் தரும் வாக்குறுதிகள் கால் காசுக்குக்கூடப் பயனற்றவை என்று கூறுகிறது "மெயில்" பத்திரிகை**

அடர்ந்த காட்டில் தன்னிச்சையாகத் திரிந்து மகிழும் வன விலங்குகளையெல்லாம் கண்ணி வைத்துப் பிடித்து நாட்டுக்கு அனுப்பி வைக்கும் கூட்டத்தைச் சேர்ந்தவன் கோபு. அவனது கைங்கர்யத்துக்குக் கூட இருந்து உதவி புரிபவன் காட்டுவாசிகளின் தலைவன் செங்கண்ணன். கடைசியில் கோபு அந்தக் காட்டிலுள்ள செங்கண்ணனின் தங்கை காட்டு ராணியையும் காதல் வலைவிரித்துப் பிடித்து விடுகிறான். ரொம்ப நேரம் மிருகங்களையே பிடிக்கும் காட்சிகளைக் கண்டு அலுத்து வந்தவர்களுக்கு இந்தக் காதல் ஜோடிகளின் களியாட்டங்கள் கானல் நீராகக் காட்சியளிக்கின்றன. காட்டு ராணி விஜயா மூடப் பழக்க வழக்கங்கள் கொண்ட காட்டுக் குடும்பத்தைச் சேர்ந்தவரானாலும் ஆங்கில 'டுவிஸ்ட்' நடனபாணியில் ஆடிக் குலுக்குவது அதிசயம்! 'செக்ஸ்' அப்பீல் இல்லாவிட்டால் படத்துக்கு மவுசு இருக்குமா? அந்தக் கைங்கரியத்தைச் செய்துள்ளவர்களுக்குத் தரை மகாஜனங்களிடமிருந்து 'விசில்' அடித்து வரவேற்புக் கிட்டுவதிலிருந்து அதன் மகிமையை அறிந்து கொள்ளலாம்!

காட்டு ராணியை நாட்டுக்குக் கொண்டுவர, அவள் கழுத்தில் திருட்டுத் தாலியேற அந்தக் காட்டிலுள்ள விநோத சம்பிரதாயம் வழி வகுக்கிறது. அது அந்தக் காட்டிலுள்ள வனிதை யாராவது வேற்று மனிதரை விரும்பினால் கருணையில்லாமல் அவளைப் பயங்கர சிங்கத்துக்குப் பலியாக்குவதுதான்! 'காத்திருந்தவன் காதலியை நேற்று வந்தவன் கொண்டு போனான்' என்கிற கதையாகக் கோபுவின் காதலி காட்டு ராணியை அவன் தம்பி முரடன் பாபு தாலி கட்டித் தன் உடைமையாக்குகிறான். இவன் சுக்ரீவ பரம்பரையோ என்னவோ!

தேவர் படமென்றால் அதில் மிருகங்களுக்கெல்லாம்தான் பிரதான அங்கம் கிடைக்கும் என்பது காட்டு ராணி படத்தில் நன்கு நிரூபணமாகியுள்ளது. மிருகங்களை விட்டு வந்தால் அதில் பங்கு கொண்ட நடிகர்கள் ஒருவருக்கொருவர் 'டம், டொம்' என்று முட்டி மோதிக் கொள்வதிலும் உருட்டித் தள்ளுவதிலும் பெரும்பாலான நேரம் கழிந்துவிடுகிறது. அவர்கள் நடிப்பதற்குச் சந்தர்ப்பம் ஏது! இம்மாதிரிப் படத்தில் தேவரின் மிருகங்கள்தான் மனத்தில் நிற்கின்றன.

## காட்டு ராணி





## லோபோ

'கானக வாழ்க்கைச் சாகஸங்கள்' (Wild life Adventure) வரிசையில் வால்ட் டிஸ்னி அளித்திருக்கும் மற்றொரு படம் லோபோ. ஓநாய்க் கூட்டத்தில் ஒப்பற்ற தீரத்துடன் விளங்கிய லோபோ என்ற ஓநாயின் வாழ்க்கையை விளக்குவதே கதை. வால்ட் டிஸ்னியின் இந்த வரிசைப் படங்களுக்குக் கதையைவிடக் காமிராவின் திறமைதான் நம் கவனத்தைக் கவருவதாக இருக்கும். லோபோவைப் பிடித்துத் தருபவர்களுக்குப் பத்து டாலர்கள் பரிசு என்று ஆரம்பித்து ஆயிரம் டாலர்களாகப் பரிசுத் தொகை உயருகிறது. ஆனால் லோபோவை யாராலும் பிடிக்கவோ கொல்லவோ முடியவில்லை. எத்தனையோ முயற்சி செய்தும் அத்தனையிலும் அது திறமையாகத் தப்பிச் செல்வது வியப்பை அளிக்கிறது. குழந்தை உள்ளத்தில் குரோதம், பகை கிடையாது என்பதைக் குட்டி லோபோ மான் குட்டியோடு நட்புக் கொண்டு பழகி வளரும் காட்சிகளைக் காட்டி நம்மை மெய்சிலிர்க்க வைத்திருக்கிறார் டிஸ்னி. லோபோவின் மனையாள் விரோதிகளிடம் சிக்கிச் சிறைப்பட்டு விடுகிறாள். மனைவியைக் காக்க வரும் லோபோவைத் தீர்த்துக் கட்டத் திட்டம் வகுத்திருக்கிறார் வேட்டைக்காரர். அவரது திட்டத்தைத் தவிடுபொடியாக்கி அவரையே திகைப்பிலாழ்த்தும்படி தன் துணைவியைச் சிறைமீட்டுக்கொண்டு செல்லும் படத்தின் கடைசிக் காட்சி சிகரமாக விளங்குகிறது. ஆனால் இதற்கு முன்பு வந்த 'வாழும் பாலைவனம்' 'பெவர் பள்ளத்தாக்கு' 'வானிஷிங் ப்ரைரி' போன்ற படங்களின் விறுவிறுப்பை ஏனோ இந்தப் படத்தில் காண முடியவில்லை. டிஸ்னியின் முத்திரைகள் ஆங்காங்கே இருந்தாலும் இந்த வரிசையில் முன்பு வந்த படங்களோடு ஒப்பிடும்போது இது தரம் குறைந்துதான் காணப்படுகிறது. லோபோவோடு காட்டும் 'இரவில் டிஸ்னி உலகம்' என்ற துண்டுப் படம் மேல் நாட்டு சங்கீதத்தை ரசிக்க முடியாததனால்தானோ என்னவோ பொறுமையைச் சோதிப்பதாக இருக்கிறது. ஆனால் இந்தக் குறைகளெல்லாம் டிஸ்னி இந்தப் படத்தை யாருக்காக எடுத்திருக்கிறாரோ அவர்களின் முன்பு எடுபடாது! குழந்தைகள் திறந்த வாய் மூடாமல் லோபோவின் சாகஸங்களைப் பார்த்து ரசிப்பார்கள். அவர்களை மகிழ்விப்பதற்காக உருவாக்கிய படம்தானே இது?



## கண்மணி! ஒதுங்கிக்கொள்
(MOVE OVER DARLING)

டோரிஸ் டேக்கு வயது நாற்பது. இருப்பினும் அவள் நடித்த படங்களுக்கு வருவாவது போல் உலகில் வேறு எந்தப் படத்துக்கும் பணம் வந்து குவிவதில்லை. ஆகவே, வயதுக்கும் வனப்புக்கும்—வயதுக்கும் நடிப்புத் திறனுக்கும் சம்பந்தமில்லை என்பது சந்தேகமின்றி நிரூபணமாகிறதல்லவா? அவள் மது அருந்துவதில்லை, சிகரெட் பிடிப்பதுமில்லை. சரியாக 9–30 மணிக்குப் படுத்துத் தூங்கிவிடுவாள். சுவாரசியமாக யாருடனாவது அவள் பேசுவதாக இருந்தால் அது ஆரோக்கியமான உணவு வகைகளைப் பற்றித்தான் இருக்கும்!

இவ்விதமாகச் சரீர சம்பத்தை நன்கு பாதுகாக்கப் பயின்றுள்ள டோரிஸ் டே, கப்பல் விபத்தில் சிக்கி, ஜன சஞ்சாரமற்ற தீவில் ஒதுங்கி, ஐந்து வருஷங்களுக்குப் பின் வீடு திரும்பும் ஒரு பெண்ணின் பாகமேற்று நடிக்கிறாள். ''கண்மணி! ஒதுங்கிக்கொள்!''- என்ற தலைப்புக் கொண்ட படத்தில், அவள் அவ்வாறு கூறுவது தன் கணவன், விபத்தில்தான் இறந்துவிட்டதாகக் கருதியதன் பேரில் இரண்டாந் தாரமாக மணம் செய்து கொள்ளவிருக்கும் பெண்ணைப் பார்த்து.

''இது நியாயமாகுமா, திருமணம் செய்து கொள்ளவிருக்கும் இருவரைப் பிரிப்பது சரியா?'' என்று தான் நடிக்கவிருக்கும் கதாபாத்திரத்தின் மீதே டோரிஸ் டேக்குச் சந்தேகம் ஏற்பட்டது. ''தவறல்ல; திருமணம் செய்து கொள்ள விருப்பவர்கள் ஒருவருக்கொருவர் ஏற்றவர்களல்ல; மணமகனின் தாயாரே அத்திருமணத்தை விரும்பவில்லை'' என்பதாகக் கதாசிரியரும் டைரக்டரும் எடுத்துக் காட்டிய பிறகே படத்தில் நடிக்க ஒப்புக்கொண்டாள் டோரிஸ் டே.

தான் நடிக்கவிருக்கும் கதாபாத்திரத்தின் மீது தனக்கு நம்பிக்கை விழவேண்டும், அப்போதுதான் நடிப்பு ஏனோ தானோவென்றிராமல் சோபிக்கும் என்பதை நன்கு உணர்ந்து நடிப்பவள் டோரிஸ்டே. அவளுடைய இந்தத் தீர்மானம் சரியான தொன்று என்பதைப்படம் நிரூபிக்கிறது.

எத்தனையோ சிக்கல்களைச் சமாளித்து, சிரிப்புக்கும் கோபதாபங்களுக்கும் இடமளித்து, நெஞ்சைத் தொடும் சம்பவங்களுக்கும் காரணமாகிப் படத்தில் கணவனைத் திருப்பிப் பெறுகிறாள் டோரிஸ்டே. நாமும் நல்ல சினிமா பார்த்த திருப்தியுடன் வீடு திரும்புகிறோம்.

எந்தக் கொட்டகையிலாவது நிமிஷத்துக்கு நிமிஷம் ரசிகர்கள் குபீர் குபீரென்று சிரித்துக் கொண்டிருந்தால் அங்கே 'சோ'வின் நாடகம் நடந்து கொண்டிருக்கிறது என்று தீர்மானமாகச் சொல்லிவிடலாம்.

விளையாட்டு வினையாக முடிந்த கதைதான் ''தில் ஏக் பந்தர்''. ஒரு நவயுவனுக்குப் பாடம் கற்பிக்கும் பொருட்டு ஒரு கறிகாய்க்காரியை நவநாகரிக மங்கையாக மாற்றப் பயிற்சி அளிக்கப்படுகிறது. பயிற்சி வேளையில் 'சோ'வின் நடிப்பு நாடகக் கொட்டகையையே அதிர வைக்கிறது. நவநாகரிகப் பெண்ணாகத் திகழ்வதற்கு எத்தனை ஆங்கில வார்த்தைகள் முக்கியமாகத் தெரிந்திருக்க வேண்டும், அந்த ஆங்கில வார்த்தைகளை எந்தச் சந்தர்ப்பங்களில் எப்படி உபயோகிக்க வேண்டும், அவள் விருந்துகளில் எப்படிக் காப்பி சாப்பிட வேண்டும், ஒன்றும் புரியாத நெருக்கடியான சந்தர்ப்பங்களில் அவள் எப்படிச் சமாளிக்க வேண்டும் என்பதையெல்லாம் 'சோ' சொல்லித் தரும் பாணியே பிரமாதம்.

சினிமா நடிகை மல்லிகாவாக மாறிவிட்ட மருதாயி இனி ஒருநாளும் பழைய மருதாயியாக மாறவே முடியாது என்று கூறி அவள் காதலன் முருகேசன் கதறியழுவது யாரையும் கண்கலங்கச் செய்யும்.

மருதாயி, ஹேமா, அரிசிக்கடை ஜம்புலிங்கம், அவள் நண்பன் சக்கரபாணி, ஜம்புலிங்கத்தின் மகன் ஆகிய பாத்திரங்கள் ஒன்றை யொன்று மிஞ்சுகின்றன. ஓயாமல் சிரிக்கவைக்கும் 'சோ', மருதாயியையும், முருகேசனையும் பிரித்து வைத்துவிட்ட தம் செயலுக்கு வருந்தும் காட்சியில் கண்ணீர் மல்கச் செய்கிறார்.

வயது வந்த ஒரு பெண்ணை ஒரு வாலிபனின் பொறுப்பில் மூன்று மாதம் நவநாகரிகப் பயிற்சிக்காக யாராவது விட்டு வைப்பார்களா என்று கேட்டால் நாடகத்தையே நிறுத்திவிட வேண்டியதுதான்! மனக் குரங்கு தாவித் தாவி மாறுவது அதிகப்படியாய்த் தோன்றுகிறதே என்றால், நாடகத்தின் தலைப்பை நிறைவேற்ற வேண்டாமா? நம்பமுடியாத சம்பவங்களையும், ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத பாத்திரங்களையும் பார்க்கும்போது நாடகம் ஒரு மாதிரியாயிருந்தாலும் பார்ப்பவர்கள் சிரிக்கிறார்களே!

## மனம் ஒரு குரங்கு





கால் கடுக்க நின்றாலும் பரவாயில்லை; தரமான பொருளாவது கிடைக்கிறதா? அதுவுமில்லை!

## கால்கள் கெஞ்சுகின்றன!

மார்கழி மாதம். வைகறைத் துயில் எழுந்து, குளிக்கவும் செய்யாமல் கொப்புளிக்கவும் செய்யாமல் மக்கள் கையும் பையுமாகப் புறப்பட்டார்கள். பக்தி வெள்ளம் கரைபுரண்டு ஓடத் தொடங்கியதனாலா? இல்லை, அரிசிப் பஞ்சம் அலையலையாகப் புரண்டு கொடுத்ததனால். என்ன க்யூ, என்ன க்யூ!

அரை லிட்டர் அரிசிக்காக நின்ற 'க்யூ' அப்புறம் அரிசிக் கார்டுக்காக நிற்கலாயிற்று. அரிசிக் கார்டு கிடைத்த பின் அதை ஒரு கடையில் பதிவு செய்துகொள்வதற்காக நின்றது. அப்புறம் வாரா வாரம் அரிசி வாங்குவதற்காக நிற்கலாயிற்று. இப்பொழுது அது பழக்கப்பட்டே போய்விட்டது - காலை எழுந்ததும் காப்பி சாப்பிட்டுப் பழக்கப்பட்டது போல!

இந்தியா காப்பி ஹவுஸ் போன்ற ஸ்தாபனங்களும் இந்த 'க்யூ' பழக்கத்தை விடாமல் காப்பாற்றி வருகின்றன. டி. யூ. ஸி. எஸ். என்று ஒரு காலத்தில் புகழ் பெற்று விளங்கிய ஸ்தாபனமும் இன்று அந்தப் பணியைச் செவ்வனே புரிந்து வருகிறது. அரசாங்கமும் நியாய விலைக் கடைகள் என்ற பெயரில் ரேஷன் கடைகளுக்கு ஆக்கம் அளித்து மக்கள் 'க்யூ'வில் நிற்கும் பழக்கத்தைப் பாழாக்காமல் பாதுகாத்து வருகிறது.

அரசாங்கம் ரேஷனுக அரிசி வழங்குகிறதே! அந்த அரிசியும் சாதாரண அரிசியா? பல வண்ணங்கள் கொண்ட அரிசி! வாசனையும் மெச்ச வேண்டிய வாசனை! அரிசியைச் சோறாக்கிவிட்டால், அது 'பொங்கலா? புளியஞ்சோறு?' என்று கூறமுடியாத ஒரு நிறம். மனத்தில் 'பிளி பேலா ஹுளி' என்று கற்பனை செய்துகொண்டு வியஞ்சனங்கள் எதுவும் செய்யாமலே சாப்பிடத் தோன்றும்! இந்த அரிசி ஒரிஸ்ஸாவிலிருந்து வந்ததாம்! இந்தியைத் திணித்து இந்தியக் கலாசாரத்துக்கு ஊறு செய்ய முயலும் இந்த வேளையிலே இந்த அரிசியினுல் இந்திய ஒருமைப்பாட்டுக்கு ஒரு வழிகோலுகிறதோ அரசாங்கம்?

வேடிக்கை என்னவென்றால், வெளியில் கிடைக்கும் அரிசி சுத்தமாக வெளுப்பாக இருக்கிறது. அரசாங்கத்தின் கறைபடிந்த மனத்துக்கும் மக்களின் வெள்ளையுள்ளத்துக்கும் இது ஓர் எடுத்துக்காட்டோ?

டி. யூ. ஸி. எஸ். என்று வழங்கும் இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலையில் ஒவ்வொரு பொருளையும் வாங்குவதற்கென்று ஒரு குழு அமைக்கப்பட்டிருக்கிறதாம். அது அப்பொருள்களை வாங்கும் விஷயத்தில் ஒரு பேரம் செய்வதுண்டாம். பேரம் முடிந்து விட்டால் அப்பொருள்களில் கல் கலந்திருந்தால் என்ன, மண் கலந்திருந்தால் என்ன? வாங்கப் போகிறவர்கள் வாடிக்கைக்காரர்கள்தானே என்று பெரியதனமாக நடந்துகொள்ளுகிறதாம். இப்படி விஷயமறிந்த வட்டாரங்கள் கூறுகின்றன.

பண்டங்களை வாங்கக் குழந்தைகளை அனுப்பியவர்கள் மட்டும் ஒரு பலம் குறைகிறதே என்று கூடிய வேண்டியதில்லை. அவர்களே போனாலும் அதே நிலைதான்! எல்லோரும் பிழைக்க வேண்டுமே! 1964ம் ஆண்டு குறிப்பிட்ட ஆறு மாதங்களில் நூறு ரூபாய்க்குக் குறையாமல் இந்தப் பண்டகசாலையில் பொருள்கள் வாங்கியிருப்பவர்களுக்குத்தான் காப்பிக்கொட்டை



தரப்படும் என்று ஓர் அறிக்கை வந்திருக்கிறது.

ஆனால் அவர்கள் போனாலும் இல்லைப் பாட்டுத்தான் பாடுகிறார்கள். கேட்டால், 'வந்தது; தீர்ந்துவிட்டது' என்கிறார்கள். டி. யூ. வி. எஸ். ஸில் பண்டங்கள் வாங்கப் போனால், 'இல்லை' என்ற சொல்லே தாராளமாக அடிபடுகிறது. இப்பொழுது அரசாங்கம் மேற்பார்வைக்கு அதிகாரி வேறு நியமித்திருக்கிறது. எனவே, இனி இல்லை என்னும் சொல்லுக்குப் பஞ்சமே இராது. ஆனால் உங்களுக்குத் தெரிந்த ஒரு தனியார் கடைக்குப் போய், உங்களுக்குத் தேவையான பொருள்களைக் கேட்டுப் பாருங்கள்.

இருக்கின்ற பொருள்களுக்குப் பில்லைப் போடுவார்கள். இல்லாத பொருள்களை 'இல்லை' என்று சொல்ல மாட்டார்கள். ''நாளைக்கு வாருங்கள். வந்துவிடும். தருகிறோம்'' என்பார்கள். அரசாங்கம் செயல்படும் முறை காரணமாக இந்தப் பொருள்கள் அவர்கள் கடைகளில் இடைக்காது என்று உங்களுக்கும் தெரியும்; அவர்களுக்கும் தெரியும். ஆனால் 'இல்லை' என்ற சொல்லை இல்லாது வைப்பவர்கள் அவர்கள்.

தனியார் துறையைச் சுதந்திரமாக விட்டால், 'இல்லை' என்ற சொல்லே இல்லாது செய்து பொருள்களையும் வாரி வழங்க முற்படுவார்கள்! அரசாங்கத்துக்குத் தெரியவில்லையே இந்த ரகசியம்!





## உங்கள் வதனம் இயற்கைப்பொலிவுடன் எழிலாய் விளங்க
## பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர்

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் உபயோகித்தால் உங்கள் வதனப்பொலிவு இயற்கை எழிலோடு வசீகரமாய் விளங்கும். இது திட்டுத்திட்டாகத் தெரியாமல் ஒரே சீராகப் படிந்து முகத்திலுள்ள மாசு மறுக்களை மறைத்து விடுகிறது. பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் பல இளம் நிறங்களில் கிடைக்கிறது. இது உங்கள் முக சருமத்தை மினுமினுப்பாக்கி நீடித்த நேரம் கவர்ச்சியுடனிருக்கச் செய்யும்.




**பாண்ட்ஸ்**
ட்ரீம்ஃப்ளவர்
ஃபேஸ் பவுடர்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. வில் இணைக்கப்பட்டது)

# அகாதமி

## பரிசு பெற்றவர்கள்

1955
தமிழ் இன்பம்
ரா. பி. சேதுப் பிள்ளை

1956
அலை ஓசை
கல்கி

1957
பரிசு இல்லை

1958
சக்கரவர்த்தித் திருமகன்
ராஜாஜி

1959
பரிசு இல்லை

1960
பரிசு இல்லை

1961
அகல் விளக்கு
டாக்டர் மு. வரதராசனர்

1962
அக்கரைச் சீமையில்
சி. சு. சோமசுந்தரம்

1963
வேங்கையின் மைந்தன்
அகிலன்

1964
?


1955


1956


1957

1958

1959

1960


1961


1962


1963

?

1964

இதைப் பற்றிச் சிறிது ஆழ்ந்து சிந்தித்த போது இதற்குக் காரணம் ஒருவேளை மேற்கண்ட மொழிகளைப் பேசும் அறிஞர்கள் பொதுவாகத் தங்கள் இலக்கிய உலகுடன் நெருங்கிய தொடர்பும், புதிதாக நல்ல இலக்கியங்கள் என்ன என்ன வருகின்றன என்று கவனமும் அதிகமாகக் கொண்டிருக்கக்கூடும் என்று தோன்றியது. தமிழகத்தில் பத்திரிகைகள் பெருகி விட்டன. புத்தக வெளியீட்டாளர்களும் பெருகி விட்டனர். இவர்கள் அனைவருடனும் தொடர்பு வைத்துக் கொள்வது மனித முயற்சிக்கு அப்பாற்பட்டது. அதிலும் தமிழிலக்கியத்தில் உண்மையான பற்றுடையவர் எவருக்கும் புதிதாக வெளியாகும் நவீனம் படித்து நிச்சயமாக 'இலக்கிய இன்பம் பெற முடியுமா' என்ற சந்தேகம் ஏற்படத்தான் செய்யும். ஆகவே, நிச்சயமாக இன்பமளிக்கும் நவில்தொறும் நூல் நயம் வெளிப்படும் கம்பர், வள்ளுவர், ஆழ்வாராதிகள், நால்வர் ஆகியோர் அருளிச் செய்த நூல்களைப் படிப்போமே என்று தோன்றும். இதைப் பார்க்கும்போது நமது பழம் இலக்கியச் செல்வங்களே, இன்றைய இலக்கிய வளர்ச்சிக்கும், மதிப்புப் போட்டுக் கணிப்பதற்கும் இடையூறாக இருக்கின்றனவோ என்று தோன்றுகிறது. இத்தகைய கஷ்டங்கள், வங்காளி, பஞ்சாபி போன்ற மொழிகளுக்கு இல்லை. அவர்கள் இலக்கியமே இப்போதுதான் வளர்ந்து வருகிறது!

ஃ ஃ ஃ

தமிழ் மொழி, இலக்கியத் துறையில் மட்டுமின்றி — பௌதிகம், பொறி இயல், வரலாறு, பொருளாதாரம் — ஆகிய எல்லாத் துறைகளிலும் வளர்ச்சியுற வேண்டும் என்று போட்டிகள் நடத்தியும், நற்சான்றிதழ்கள் வழங்கியும் பல முயற்சிகள் செய்து வரும் ஒரு ஸ்தாபனத்துடன் தொடர்பு கொண்டுள்ள ஒரு நண்பரை அணுகிப் பேசிக் கொண்டிருந்தோம்.

ஒருமுறை விஞ்ஞான விஷயங்களைப் பற்றி அதாவது ஸல்ப்யூரிக் ஆஸிட், ஆர்க்கிமிடீஸ் தத்துவம் போன்ற விஷயங்களைப் பற்றிச் செய்யுள்களாகவே யாத்து ஒருவர் ஒரு புத்தகம் அனுப்பியிருந்தாராம் போட்டிக்கு. இதை விஞ்ஞானப் புத்தகப் போட்டியில் சேர்த்துக் கொள்வதா, கவிதை இலக்கியப் போட்டியில் சேர்த்துக் கொள்வதா என்ற சந்தேகம் வந்து விட்டதாம். கடைசியில் இதைப் பற்றி முடிவு செய்யும் பொறுப்பை எழுதிய ஆசிரியருக்கே விட்டுவிடுவோம் என்று கருதி அதன் ஆசிரியருக்கு எழுதிக் கேட்டார்களாம்!

'கவிதை வெறி உச்ச கட்டத்தில் இருந்த போது என்னை அறியாமல் வெளிப்பட்ட கவிதைச் செல்வங்களாகும் இவை. இவற்றைப் பற்றி நீங்கள் இப்படிக் கேட்பதே எனக்கு வியப்பாக இருக்கிறது' என்று கூறினாராம் அந்நூலாசிரியர்!

இதைப் பார்த்துச் சிரிப்பதா, அழுவதா?

இன்னொரு நிகழ்ச்சியைப் பாருங்கள். அந்த ஸ்தாபனம் நிகழ்த்திய மற்றொரு போட்டிக்கு வந்த புத்தகங்களைப் பரிசீலனை செய்ய ஒரு பிரபல வழக்கறிஞரை ஒரு சமயம் நீதிபதியாக இருக்கக் கேட்டுக் கொண்டார்களாம். ஏனெனில் குறிப்பிட்ட ஓர் இலக்கியத் துறையில் அவர் பல காலம் ஆவல் கொண்டு நல்ல பணி புரிந்திருக்கிறார். அவரிடம் அந்தக் குறிப்பிட்ட துறையைச் சார்ந்த சுமார் நூறு புத்தகங்களை அனுப்பிப் பரிசுக்குகந்ததைத் தேர்ந்தெடுத்து அனுப்பும்படி கேட்டுக் கொண்டார்களாம். அவரிடமிருந்து பதிலே பல காலம் வரவில்லை. பிறகு விசாரித்ததில், அவர் அந்தப் புத்தகங்கள் எங்கேயோ தொலைந்து போய் விட்டதாக அறிவித்தாராம்! எப்படிக் கதை!

இந்த நண்பர் மற்றுமொரு கருத்தை வெளியிட்டார். "எந்த ஒரு தனி நபராலும், இலக்கியம் வளர்ந்து வரும் வேகத்தோடு தொடர்பு வைத்துக் கொண்டு வர முடியாது. இதை அறிந்துதான் இலக்கிய விமரிசனத்துக்கென்றே பத்திரிகைகள் மேனாடுகளில் இருக்கின்றன. அந்த விமரிசனப் பத்திரிகையைப் பார்த்துவிட்டால் போதும், வாசகர்கள் இன்றைய இலக்கிய உலகுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்களாகி விடுவார்கள். அத்தகைய வசதி இன்றைய தமிழ்ப் பத்திரிகை உலகில் இல்லை" என்று குறைப்பட்டுக் கொண்டார்.

கடந்த மூன்று வருஷங்களில் வெளியான தரமான நூலைக் கூறுங்கள் என்றால் எதை என்று சொல்வது? எத்தனை நூல்களைப் படித்து எப்படி எடை போடுவது? சிபாரிசு செய்யும் நிலையில் உள்ளோர் நூல்களை வாங்கிப் படிக்க சாகித்திய அகாதமி வசதி செய்து கொடுப்பதாகவோ அல்லது அவர்களுக்குச் செலவாகும் நேரத்தை அகாதமி ஈடுகட்டுவதாகவோ தெரியவில்லை. பிரபலமான நூல்கள் இவர்கள் கவனத்துக்கு எப்படியும் வந்துதானே தீரும் என்று கூறுவதற்கும் இல்லை. பிரபலமான நூல்கள் தரமான நூல்களாய் இருக்க வேண்டும் என்பதில்லையே? அதே போல் நல்ல விளம்பரமாகிப் பிரபலமாக இருப்பதாலேயே, அது மட்ட சரக்காக இருக்குமோ என்று சிலர் ஐயுறக் கூடும். சிபாரிசு செய்ய வேண்டிய பொறுப்புள்ள ஏழு பேர்கள் ஏழு புத்தகங்களுக்கு வோட்டுச் செய்தால் எதற்குமே பரிசு கிடைக்காமல் போவதும் இயல்புதானே?

"சாகித்திய அகாதமியின் பிராந்தியக் காரியாலயங்களின் சார்பில் இலக்கிய வளர்ச்சி பற்றிய சர்ச்சைகள், சொற்பொழிவுகள் நிகழ்த்தினால் அந்தந்த மொழிகளில் சிருஷ்டி இலக்கியங்கள் வளர்ந்துள்ள நிலை முக்கியப்பட்டவர்களுக்கு விளங்கும். இலக்கிய வளர்ச்சிக்குத் துணை புரியும் பத்திரிகைகள், புத்தகப் பதிப்பகங்கள், வானொலி போன்ற ஸ்தாபனங்களின் பிரச்னைகள், தேவைகள் குறித்தும் இத்தகைய கூட்டங்களில் ஆராயலாம்" என்ற ஓர் எழுத்தாளரின் கருத்தும் நல்லதென்றே தோன்றியது.

இந்த ஆண்டு தமிழ் இலக்கியத்துக்குப் பரிசு இல்லாமற் போனது பெரும் குறைதான்.

**எஸ். வி. எஸ்.**



# சிறந்ததையே வற்புறுத்துகின்றவர்கள் ப்ரூக் பாண்ட் தேயிலையை விரும்புவது ஏன்?

இந்தியாவிலே அன்றாடம் 7 கோடியே 50 லட்சம் கோப்பை ப்ரூக் பாண்ட் தேனீரை ஜனங்கள் அருந்துகின்றனர். அவர்களில் எவரிடம் கேட்டாலும் ப்ரூக் பாண்ட் தேயிலை நல்ல ருசியுடன் முழுத் திருப்தி அளிக்கிறது என்றே கூறுவார்கள். ஆனால் அதன் காரணத்தை அவர்களால் சொல்ல முடியாமற் போகலாம். ப்ரூக் பாண்ட் கம்பெனியாரும் சிறந்ததையே வற்புறுத்துகின்றவர்கள். ஆதலால் இந்தியாவிலுள்ள மிக உயர்ந்த தேயிலைகளைத் தேர்ந்தெடுத்து, 60 ஆண்டுகளுக்கு மேலான அனுபவத்தால் கலவன் செய்வதிலே முதன்மையான அவர்கள், தங்கள் திறமை மூலம் சிறந்த தேயிலைகளைக் கலவன் செய்கின்றனர். பிறகு, கலவன்களை பிரதி வாரம் உங்கள் வழக்கமான கடை உள்பட இந்தியாவெங்குமுள்ள 6,00,000 கடைகளுக்கு அனுப்புகின்றனர். இதனாலேயே, முற்றிலும் புதிய தன்மையுடனும் நறுமணத்துடனும் நீங்கள் தேனீர் அருந்தி அனுபவிக்க, ப்ரூக் பாண்ட் தேயிலை உத்தரவாதம் அளிக்கின்றது.

உங்களைப்போல் — வாழ்க்கையில் நல்லவைகளிலே இன்பம் துய்ப்பவர்கள் ப்ரூக் பாண்ட் தேயிலையை விரும்புவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை!




JWT BB 2128

ஓய்வுபெற்ற யானைகள் என்ற வர்க்கம் இங்கே இருக்கிறது. காரோட்டிகளுக்கு இந்த யானையை வழியில் பார்த்தால் பயம்தான். பழைய மரக் கடை யானைதான் என்று அலட்சியமாகப் போய்விட முடியாது!

அந்தமான் வந்த கப்பல்





ரிக்கோபாரிப் பெண்மணி

# அந்தமான் தீவுகள்

## லோக சஞ்சாரம்

**யா**ரையாவது பார்த்து, 'என்னையா மரம்மாதிரி நிற்கிறாய்?' என்று கேட்டால் அந்த நபருக்குக் கோபமோ, உள்ளக் கொந்தளிப்போ ஏற்படுவது சகஜம். தன்னை ஒன்றுக்கும் உதவாத கட்டை என்று சொல்லி விட்டாரே என்ற ஆவேசம் கூடத் தோன்றும். ஆனால் அவர் அந்தமான் தீவைப் பற்றியும் அங்கு மரங்களுக்குள்ள மதிப்பையும் அந்தஸ்தையும் கேள்விப்பட்டிருந்தாரானால் தம்மை மரத்துக்கு ஒப்பிட்டது பற்றி ஓரளவு திருப்தி கூடப் பட்டுக்கொள்வார். அத்தனை கௌரவம் அந்தமான் மரங்களுக்கு!

சமீபத்தில் இரண்டு தடவைகள் அந்தமான் தீவுகளுக்குப் போய்த் திரும்பிய சென்னை உயர்நீதிமன்றத்தின் இளம் வழக்கறிஞர் திரு கா. வெழுவேந்தன் அவர்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது, அந்தமான் தீவுகளின் மர வளங்களோடு மனிதர்களின் வாழ்க்கை பற்றியும் விவரமாகத் தெரிந்துகொள்ள முடிந்தது.

வெளிநாடுகளுக்குப் போக வேண்டும் என்ற நினைவு தோன்றியதும் கூடவே, பாஸ்போர்ட், விஸா, 'பி' பாரம், ரிசர்வ் பாங்க் போன்ற பயங்கர எண்ணங்களும் தோன்றுவது இந்த நாட்களில் ரொம்ப சகஜம். ஆனால் இத்தகைய கெடுபிடிகள் எதுவுமே தேவையில்லாமல் ஹாய்யாக ஒரு வெளி நாட்டுக் கப்பலில் பிரயாணம் செய்து திரும்பலாமென்றால் அது அந்தமான்தான். பம்பாய், கல்கத்தா போய் வருவது போல் அத்தனை சுலபம்.

நூற்றி எழுபத்து மூன்று ரூபாய்களைக் கொடுத்து முதல் வகுப்பு டிக்கட்டையோ, நாற்பத்தி ஐந்தே ரூபாய்கள் கொடுத்துக் கடைசி வகுப்பு டிக்கட்டையோ வாங்கிக் கொண்டு எம். வி. அந்தமான் என்ற கப்பலுக்குள் நுழைந்து விடலாம். சென்னைக்கும் அந்தமான் தீவுகளின் பிரதான துறைமுகமாகிய போர்ட்பிளேருக்கும் இடையே சுமார் எழுநூற்றி நாற்பது மைல்கள் தான்!

சென்னையை விட்டுக் கிளம்பிய நான்காம் நாள் மூன்றாம் பகலில் பசுமையான தென்னஞ் சோலைகள் நிறைந்த நிக்கோபார் தீவுகள் கண்களில் பட ஆரம்பிக்கின்றன. நிக்கோபார் தீவுகளில் சரக்குகளை இறக்கக் கப்பல் நின்றாலும் பிரயாணிகள் இறங்கிப் போய் ஊர் சுற்றிப் பார்க்க அனுமதிக்கப்படுவதில்லை. அதற்கு முன்கூட்டியே அனுமதி பெற்றிருக்க வேண்டும். நிக்கோபாரிலுள்ள பிரபல கோர்ஜா வியாபாரி அக்கோஜி என்பவர் ஆறு கப்பல்களுக்குச் சொந்தக்காரர். அந்த வியாபாரி நிக்கோபாருக்கு ஒரு ராஜா போல் விளங்குகிறார்.

ஆனால் அமிர்தம் போன்ற இளநீர்களை அந்தத் தீவினர் நிறையக் கப்பலுக்கே கொண்டு வந்து விற்கிறார்கள்.

எட்டு மணி நேரத் தங்குதலுக்குப் பிறகு இன்னும் நூற்றி நாற்பத்தி மூன்று மைல்களுக்கு அப்பாலுள்ள அந்தமான் தீவுகளை நோக்கி ஓர் இரவு முழுவதும் ஓடி மறுநாட் காலையில் அங்கு போய்ச் சேருகிறது.

பாக்கு, தென்னை மரங்களடர்ந்த நிக்கோபார் தீவுகளின் நடுவில் நிறைய சமவெளிகள் இருக்கின்றன. இங்குதான் விமான தளமும் இருக்கிறது. மழைக் காலங்களில் இந்தத் தீவுகளையும் கல்கத்தாவையும் இணைக்கும் விமான சர்வீஸ் இயங்குவதில்லை.


அந்த நாளைய
சிறைச்சாலை

அந்தமான் தீவுகளின் மொத்த எண்ணிக்கை இருநூற்றி இருபத்தி மூன்று. இருநூறு மைல் நீளத்தில் ஒன்றன் பின் ஒன்றாக ரயில் தொடர்போல் அமைந்திருக்கும் இந்தத் தீவுத் தொடரில் பெரும்பாலானவை மனித சஞ்சாரமற்றவை. இந்த தீவுகளின் சராசரி அகலம் பதினைந்தே மைல்கள்தான்.

சுமார் பதினையாயிரத்தை எட்டும் பழங்குடி மக்களும் அறுபத்தி ஐயாயிரம் குடி ஏறியவர்களும் இந்தத் தீவின்வாசிகளாய் இருக்கிறார்கள். பழங்குடி மக்களில் ஜாரவர்கள் என்னும் வர்க்கம் நாகரிகத்தை அறவே வெறுத்து இன்னும் வில் அம்புகளுடன் ஒதுங்கிக் காட்டுமிராண்டிகளாகவே அலைகிறார்கள். தனியாக வரும் இதர வர்க்க மனிதர்களை அம்புகளால் அடித்துக் கொல்வதற்கும் அவர்கள் தயங்குவதில்லை. ஓங்கியர் என்று சொல்லப்படுபவர்கள் நாளடைவில் குடியேற்றவாசிகளுடன் கலந்துகொண்டு வருகிறார்கள். நல்ல உழைப்பாளிகள். நிக்கோபாரிகள் என்று அழைக்கப்படுபவர்கள் பூரணமாகத் தங்களைச் சூழ்நிலைகளுக்கொப்ப மாற்றிக் கொண்டு நாகரிகம் அடைந்திருக்கிறார்கள். எல்லோரும் இப்போது பேசும் பொது மொழி ஹிந்துஸ்தானி!


போர்ட் பிளேர் கடற்கரை

அந்தமான் தலைநகர் போர்ட்பிளேரில் தெருக்கள் என்று கிடையாது. எங்கு பார்த்தாலும் மரத்தாலான வீடுகள்தான். இந்த வீடுகளுக்கு முற்றிலும் மாறுபட்டிருப்பது செங்கல்

கட்டிடத்தாலான பழைய ஜெயில்தான். அதன் தேவை குறைந்துவிட்ட பிறகு பாதிப் பகுதியை ஆஸ்பத்திரியாக மாற்றியிருக்கிறார்கள்.

கர்ஜான், படாக் என்று குறிப்பிடப்படும் மர வகைகள் அந்தமானின் அந்தஸ்தை உலகச் சந்தையில் உயர்த்த உதவுகின்றன. வனப் பொருள்கள் வருமானத்தின் தொண்ணூற்றி ஐந்து சதமாக இருக்கின்றன. உறுதியான கர்ஜான், படாக் ரகங்களுக்குத் துணையாக மென்மையான படாம் என்ற ரக மரமும் இருக்கிறது. இதைத் தீக்குச்சி செய்ய உபயோகிக்கிறார்கள். பார்க்கப் பிரும்மாண்டமாக இருக்கும் படாம் மரத்தைப் பத்தே நிமிடங்களில் துண்டாக்கிப் பல லட்சம் தீக்குச்சிகளாக மாற்றும் யந்திரங்களைத் தீப்பெட்டித் தயாரிப்புக் கம்பெனியார் இங்கு நிறுவியிருக்கிறார்கள். பெரிய தேக்கு மரங்களை வெட்டித் துண்டாக்கும் ராட்சத மர யந்திரசாலைகளும் இங்கு இருக்கின்றன. வன இலாகாவில் பணி செய்பவர்களில் பெரும்பாலானவர்கள் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள்.

காட்டு மிருகங்களோ பாம்பு, தேள் போன்ற விஷ ஜந்துக்களோ இந்தத் தீவுகளில் இடையவே கிடையாது.

குழந்தைகள் கூடப் பயமின்றி அடர்ந்த காடுகளில் நடக்கலாம். மழை மாத்திரம் நிறைய உண்டு. ஆகவே எல்லோருடைய கையிலும் கேரளத்தில் காண்பது போல் குடைகளைப் பார்க்கலாம். இரவு நேரங்களில் இந்தத் தீவினர் கையில் பாட்டரி விளக்குகள் இல்லாமல் கிளம்ப மாட்டார்கள். காரணம் ஒரு வகை பூரான் நடமாட்டமே. அதற்கு இவர்கள் மிகவும் பயப்படுகிறார்கள். அது கடித்தால் உடல் முழுதும் தடித்துவிடுமாம்.

இந்தத் தீவுகளின் மழை விசேஷம்: எத்தனை நனைந்தாலும் ஜுரம், தலைவலி ஒன்றும் வருவதில்லை.

கொடூரமான ஜாரவர்கள் நடமாடும் பகுதியைச் சுற்றி போலீஸ் அவுட் போஸ்டுகள் போட்டிருக்கிறார்கள். அவர்களை நாகரிகமாக்க அரசாங்கம் பல முயற்சிகள் எடுத்துக் கொள்கிறது. ஆனால் ஒன்றும் பயனளிக்கவில்லை. பெரிய தோணிகளில் துணிமணிகள், ஆகார வகைகள், முகம் பார்க்கும் கண்ணாடி முதலியவற்றை வைத்து இரவு வேளைகளில் அந்த ஜாரவர்கள் நடமாடும் பகுதிகளில் கொண்டு போய்க் குவித்துவிட்டுத் திரும்புகிறார்கள். பகலில் போனால் அந்த ஜாரவர்கள் புதர் மறைவிலிருந்து தோணியில் வருபவர்களை அம்பால் அடிக்க முயலுவர்.

இப்படி விடப்பட்ட பண்டங்களை அவர்கள் எடுத்துப் புத்திசாலித்தனமாக உபயோகிக்கிறார்களா என்று தெரிந்துகொள்ளச் சில நாட்கள் கழித்து அங்கே போய்ப் பார்ப்பார்களாம். அவர்கள் விட்டு வந்த சாமான்களெல்லாம் சின்னாபின்னமாக்கப்பட்டு அங்கேயே குவிக்கப்பட்டிருக்குமாம். ஆனாலும் அரசாங்கத்தின் நம்பிக்கை தளரவில்லை. என்றாவது ஒரு நாள் அவர்களை வழிக்குக் கொண்டு வரலாம் என்று நம்புகிறார்கள்.

அடர்த்தியான வனங்களில் புலிகளை உற்பத்தி செய்யலாமே என்ற ஆசையில் இரண்டு புலிகளை இறக்குமதி செய்தது அரசாங்கம். ஆனால் வனப் பகுதிகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் பயந்து ஆட்சேபித்தார்கள். புலிகள் திருப்பி ஏற்றுமதி செய்யப்பட்டன.

இங்கே மான்கள் நிறைய இருக்கின்றன. இந்தத் தீவுகளுக்குப் பெயர் வந்ததற்கு வேடிக்கைக் கதை ஒன்று சொல்லப்படுகிறது. அந்தக் காலத்தில் இந்தத் தீவுகளின் பக்கமாகப் படகுகளில் வந்த தமிழர்கள், கடற்கரை ஓரமெல்லாம் மான்கள் துள்ளி ஓடுவதைக் கண்டு வியந்தார்களாம். ''அந்தோ மான் நிக்குது பார்! அந்தோ மான் நிக்குது பார்!'' என்று திருப்பித் திருப்பிச் சொன்னார்களாம். அதிலிருந்துதான் அந்தத் தீவுகளுக்கு அந்தமான், நிக்கோபார் என்ற பெயர்கள் தோன்றின என்று சொல்கிறார்கள். எவ்வளவு தூரம் உண்மையோ?

ஓய்வு பெற்ற யானைகள் என்ற வர்க்கம் இங்கே இருக்கிறது. இயற்கையாக இங்கு யானைகள் கிடையாது. மரம் சுமக்க யானைகளை வெளிநாடுகளிலிருந்து கொண்டு வருகிறார்கள். அவைகளுக்கு வயதாகி, இனிமேல் உழைக்க முடியாது என்ற நிலை வரும்போது அவைகளைச் சுதந்திரமாக அலையவிட்டு விடுகிறார்கள். அந்த யானைகள் அதற்கு மேல் புதிய பலம் பெற்றுக் காடுகளில் உற்சாகமாகத் திரிய ஆரம்பிக்கின்றன. காரோட்டிகளுக்கு இந்த யானையை வழியில் பார்த்தால் பயம்தான். பழைய மரக்கட்டை யானைதான் என்று அலட்சியமாகப் போய்விட முடியாது!

இரண்டாவது யுத்த முடிவு காலத்திற்கு முன்பு இந்தத் தீவுவாசிகள் ஜப்பானியர்களின் கொடுமைக்கு நிறைய ஆளாகியிருக்கிறார்கள். வேலை செய்ய இயலாத வயது முதிர்ந்தவர்களையெல்லாம் அடுத்த தீவில் கொண்டு போய் ஒதுக்குவது என்ற சொல்லி அவர்களையெல்லாம் நடுக் கடலிலேயே மூழ்கடிக்கும் ஒரு நற்பணியை இங்கு வந்த ஜப்பானியர்கள் மேற்கொண்டார்கள். அவர்களுக்கு உழைக்க இளைஞர்கள்தான் தேவையாக இருந்தது. இருக்கும் உணவுக்குப் போட்டியாக வர முதியவர்கள் அவர்களுக்குப் பாரமாக இருந்தார்கள்!

அப்படி 'அடுத்த தீவுக்'ப் புறப்படத் திரட்டப்பட்ட ஒரு குழுவில் கிருஷ்ணசாமி என்ற தமிழரும் இருந்தார். அதிருஷ்டம் அவர் பக்கம் இருந்தது. அவர் திறமையான சமையற்காரர் என்றும் இட்டிலி தயாரிப்பதில் நிபுணர் என்றும் கடைசி நிமிஷத்தில் ஜப்பானிய அதிகாரியிடம் யாரோ சொன்னார்கள். கிருஷ்ணசாமி அந்தக் குழுவிலிருந்து வெளியேற்றப்பட்டார். அவர் உயிரும் உடலில் தங்கிவிட்டது.

பிறகு ஆங்கிலேயர்கள் மீண்டும் வந்த பிறகு அவர்களிடம் உதவி பெற்றுச் சிறிய அளவில் வியாபாரம் தொடங்கி இன்று ஒரு பெரிய வியாபாரியாக விளங்குகிறார். தமிழ் நாட்டிலிருந்து வருபவர்களுக்கு அன்புடனும் பண்புடனும் அவர் உதவுகிறார்.

## கழுத்து சுளுக்கு உங்கள் மாலை அலுவல்களை பாதிக்க விடாதீர்கள்

சங்கடமான நிலைதான். ஆனால் நீங்கள் கவலைப்படாமல், திட்டப்படி வெளியே செல்லலாம்—கைவசம் மட்டும் ஒரு டியூப் அனேலியம் வலி நிவாரணி இருந்தால் போதும்.

அனேலியம் விரைவாகப் பலனளிக்கும் வலி நிவாரணி. உங்களைப் போன்ற மென்மையான, அழகாகப் பாதுகாக்கப்படும் சருமங்களுக்கு ஏற்றபடி தயாரானது. அதிலுள்ள சக்திவாய்ந்த மருந்துகள், தலைவலி, தசை வலி, மார்புச்சளி மற்றும் ஜலதோஷத்திலிருந்து விரைவில் நிவாரணமளிக்கின்றன. குழந்தைக்குக் கூட ஒரு கவலையுமின்றி அதை உபயோகிக்கலாம்.







சிக்கனமான, கச்சிதமான 'டின்'னிலும் கிடைக்கிறது

# அனேலியம்

விரைவாகப் பயனளிக்கும் இதமான வலி நிவாரணி

அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்—பம்பாய்—கல்கத்தா—டெல்லி

**இன்னும் கொஞ்சம் சிரி பார்க்கலாம்!** ரோஹித் ஷர்ட்டிங்குகள்—கோடுகளுடனோ, இல்லாமலோ, மெர்ஸிரைஸ்ட் மற்றும் ஸான்போரைஸ்ட். ரோஹித் புடவை, ஆடையணிப் பொருள்கள்—உன்னத நெசவு, உயரிய அமைப்பு.



பட்டுப்பூச்சி அடையாளத்தை எப்பொழுதும் பார்த்து வாங்குங்கள்.

**ரோஹித் மில்ஸ் லிட்.,**
அஹமதாபாத்.




இது ஒரு ரோஹித் க்ரூப் ஸ்தாபனம்

81-RH-3TAM

ரயில் என்பதைக் காணாத தீவுகள் இவை. சுமார் முப்பது பஸ்கள் ஓடுகின்றன. படகுப் போக்குவரத்துத்தான் அதிகம். கட்டண விஷயத்தில் மலிவும் கூட.

லாங் ஐலந்தில் (நீளத் தீவு) ஒரு பெரிய பிளைவுட் தொழிற்சாலை இருக்கிறது. நிறைய தமிழர்கள் வேலை செய்கிறார்கள். ஒரு படிப்பகமும் நடக்கிறது.

வைபூர் தீவில் இளவரக இளநீர் என்ற ரகம் பிரசித்தமாம். குடிக்கக் குடிக்கத் திகட்டாதாம். அத்தனை இனிப்பு. பாசிகள் சிப்பிகள் ஏராளமாகக் கிடைக்கும்.

விடியாடாப் தீவு. நம் பக்கத்து வேடந்தாங்கல் போல. விதம் விதமான பறவைக் கூட்டங்கள் இங்கே வருகின்றன.

அந்தமான் தீவுகளுக்கு 'ஒன்னே ஒன்னு கண்ணே கண்ணு' என்ற வகையில் ஒரே ஒரு சினிமாக் கொட்டகை மாத்திரம் இருக்கிறது. எல்லா பாஷைப் படங்களும் மாறி மாறி ஓடுகின்றன. மின்சார வசதி நிறைய உண்டு. மரங்களைக் கரியாக்கி, அதைக் கொண்டு இயங்கும் அனல் மின்சார நிலையத்தை நிறுவியிருக்கிறார்கள்.

கடற்கரையை யொட்டிய அழகான ரோடுகளை அந்த நாட்களில் ஆயுள் தண்டனைக் கைதிகள் அழகாகவே போட்டுவிட்டுப் போயிருக்கிறார்கள். வாழ்க்கைச் செலவு சற்று அதிகம்தான். அதற்கான வருமானமும் இருக்கிறது. பாரதத்திலிருந்து வரும் பத்திரிகைகளெல்லாம் கப்பலிலே வரவேண்டியிருப்பதால், ஒரு மாத காலப் பேப்பரை ஒரேயடியாக உட்கார்ந்து படிக்கும் வாய்ப்பு இங்குதான் உண்டு! சுங்க அதிகாரிகளுக்குப் பயப்படாமல் எதையும் இங்கிருந்து பாரதத்துக்கு எடுத்து வரலாம். கட்டுப்பாடு இல்லை. மரச் சாமான்கள் அங்கு கொள்ளை மலிவு.

திரு வேழவேந்தன் மரச் சாமான்கள் கொண்டு வரவில்லை. மனத்திலுள் பசுமையான பல நினைவுகளைக் கொண்டு வந்திருக்கிறார்.

— திருமூலர்

குட்டிக் கதை

# உரிமை



'கீ கீ....கூ கூ' என்று கத்தின, கூட்டுக்குள்ளிருந்த குஞ்சுகள்.

''என் அருமைக் குஞ்சுகளா, ஏன் இப்படிக் கத்துகிறீர்கள்?'' என்று கேட்டது, அவற்றுக்கு இரையூட்டிக் கொண்டிருந்த தாய்ப் பறவை.

''அதோ பார், அம்மா! யாரோ ஒருவன் கையில் சுருக்குக் கயிறுடன் மரத்தின் மேல் ஏறி வருகிறான், நம்மைப் பிடிக்க!'' என்றது ஒரு குஞ்சு, அவனைத் தன் அலகால் தன்னுடைய தாய்க்குச் சுட்டிக் காட்டி.

தாய்ப் பறவை சிரித்தது. ''ஏன் அம்மா, சிரிக்கிறாய்?'' என்று கேட்டது குஞ்சு.

''அவன் நம்முடைய கழுத்தில் சுருக்கு மாட்ட வரவில்லை; தன்னுடைய கழுத்தில் தானே சுருக்கு மாட்டிக் கொள்ள வருகிறான்!'' என்றது அது.

''அட, பாவமே! அவன் ஏன் அம்மா, தன் கழுத்தில் தானே சுருக்கு மாட்டிக் கொள்ள வேண்டும்?'' என்று கேட்டது இது.

''இவ்வளவு பெரிய உலகத்தில் அவனுக்கு இருக்க இடம் கிடைக்கவில்லையாம்; தின்னச் சோறு கிடைக்கவில்லையாம்...''

''அதெல்லாம் நமக்குக் கிடைக்கும்போது அவனுக்கு மட்டும் ஏன் அம்மா கிடைக்கவில்லை?''

தாய்ப் பறவை சொல்லிற்று:

''அவன் அடைந்த முன்னேற்றம் அப்படி! அவனும் நம்மைப் போல் இந்த உலகத்தில் எதற்கும் உரிமை கொண்டாடாமல் வாழ்ந்து கொண்டிருந்த போது, அவனுக்கும் நமக்குக் கிடைப்பது போல் எல்லாம் கிடைத்துக் கொண்டுதான் இருந்தன. அவன் எப்போது 'இது உன்னுடையது, அது என்னுடையது' என்று உரிமை கொண்டாட ஆரம்பித்தானோ அப்போதே அவனுக்கு இங்கே எதுவுமே உரிமையில்லாமல் போய்விட்டது!'' —விந்தன்



நம் விஜயகுமாரியிடமிருந்து மலரும் இரகசியம்:

# 'எனது அன்றாட அழகுப் பராமரிப்பு: லக்ஸ்'

வெள்ளித் திரை விண்மீன் விஜயகுமாரி விளம்புகிறார்: 'எனது அன்றாட அழகுப் பராமரிப்பு முறையை நீங்களும் மேற்கொள்ளலாம். வளம் கொழிக்கும் லக்ஸ் நுரையிலே இருக்கிறது தூய்மை வாய்ந்த மென்மை உங்கள் மேனி யெழிலைச் சிறப்பிக்கும் தன்மை. மணமோ மதிமயக்கும். உமதெழிலும் மலரட்டுமே லக்ஸ் உதவியால்.




**லக்ஸ் டாய்லெட் சோப்: சினிமா நட்சத்திரங்களின் அழகுசாதன சோப்**

வெண்மையிலும், வானவில் வண்ணங்கள் நான்கிலும் உண்டு.

*இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு*

LTS. 177-140 TM



லண்டன் லார்ட் மேயர் துக்க வாள் கையிலேந்தி முன் செல்ல, செயின்ட் பால் கதிட்ரலிலிருந்து வின்ஸ்டன் சர்ச்சிலுக்கு இறுதி மரியாதை செலுத்திவிட்டுத் திரும்பும் அரச குடும்பத்தினர். ராணி இரண்டாவது எலிஸபெத், பிலிப் கோமகன், ராணியின் அன்னை எலிஸபெத் அம்மையார், வேல்ஸ் இளவரசர் சார்ல்ஸ், இளவரசி மார்கரெட், அவரது கணவர் லார்ட் ஸ்னோடன் ஆகியோரைப் படத்தில் காணலாம்.

நாற்பது மணி நேரத்தில் நினைத்த இடத்தில் அமைக்கக் கூடிய புது வகை எஃகுப் பாலத்தின் தோற்றம் இது. மேற்கு ஜெர்மனியில் பாலத்தின் கீழே உள்ள சாலை பழுது பார்க்கப் படுவதால், போக்குவரத்தைச் சமாளிக்க இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறார்கள்.





பாரதிய சங்கீத கலைச் சங்கத்தின் சங்கீதப் பள்ளிக் கட்டிடத்துக்குச் சமீபத்தில் சங்கீத கலாநிதி அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார் அஸ்திவாரக் கல் நாட்டினார்.

# 16. செந்தில் மேவிய கந்தவேள்

# கந்தன் கருணை

தேவகிரியில் எழுந்தருளி யிருந்த குமாரக் கடவுள், கதிரவன் உதயமானதும், தேவர்களும், சேனைகளும் புடைசூழத் தென் திசை நோக்கிச் சென்றார்.

பிருங்கி முனிவர் உமையன்னையை நீக்கிச் சிவபெருமானை மட்டும் வலஞ் செய்ததன் காரணமாக தேவியார் சிவபெருமானிடமிருந்து தம்மைப் பிரிக்க முடியாமல் அவரது இடப் பாகத்தைப் பெற விரும்பித் தவம் செய்த திருக்கேதாரம் என்னும் திவ்வியத் தலத்தைக் கண்டு தரிசித்தார் முருகவேள். திவ்விய ஸ்தலங்களின் அரசாக மதிக்கப் பெறும் காசியம்பதியைத் தரிசித்தார். சிவபாத முனிவரின் புதல்வராகிய திருநந்தித் தேவர், சிவபெருமானைத் தாங்கும் பொருட்டுத் தவம் செய்து மலையாகிப் பரமேசுவரனைத் தாங்கிய திருப் பருப்பதத்தைத் தரிசித்தார். மாங்கனிக்காக உமாதேவியாரிடம் தாம் கோபித்துக் கொண்டு பாதாளத்துக்குச் சென்று குகை வழியே வெளியே தாம் வந்ததும், அவ்வாறு வெளியே வந்த இடத்திருந்த புஷ்கரணி தீரத்திலே திருமால் முதலிய தேவர்கள் தம்மைப் பூசித்ததுமாகிய திருவேங்கடமலையை அடைந்தார்.

திருவேங்கடமும் முருகனுக்குரிய திவ்விய ஸ்தலங்களுள் ஒன்று. 'பண்டு தான் வரும் வேங்கடகிரியையும் பார்த்தான்' என்று கச்சியப்பர் கூறுகிறார்.

சிலந்தியும், பாம்பும், யானையும், சிவகோசரியாரும், கண்ணப்ப நாயனாரும், நக்கீர தேவரும், கன்னியரும் முத்தியடைந்த தட்சிண கைலாயமாகிய திருக்காளத்தி மலையைத் தரிசித்தார். காளி தேவி ஆடல் புரிந்தபோது அவளது செருக்கு அழியவும் உலகம் இன்புறவும் சிவபெருமான் ஆடல் புரிந்த திருவாலங்காட்டைத் தரிசித்தார். ஊழிக் காலத்தும் அழிவில்லாததாய், திருமால், நான்முகன் முதலிய தேவர்களுக்கு இருப்பிடமாய் அமைந்ததும், சிவபெருமான் மாமர நிழலில் எழுந்தருள்வதாயுமுள்ள திருக்காஞ்சி நகரத்தைத் தரிசித்தார்; அங்கே காமாட்சி அம்மையார் பூசித்த திருவேகம்பத்தையும், நான்முகன், திருமால் முதலிய அமரர்கள் பூசித்த மற்றைய ஆலயங்களையும் தரிசித்தார். பிரம்மாவும், விஷ்ணுவும் அடிமுடி அறியவொண்ணாமல் எம்பெருமான் எழுந்தருளிய திருவண்ணாமலையைத் தரிசித்தார். இறந்த சுற்றமற்ற உயிர்களையெல்லாம் உமாதேவியார் தமது ஆடையால் விசிறிக் களைப்பாற்றச் சிவபெருமான் தமது திருத் தொடையின் மேல் அவர்களைக் கிடத்தி, திருவைந்தெழுத்தின் உண்மையை உபதேசித்துத் தமது சாரூபத்தைக் கொடுத்தருளும் காசிக்குச் சமமான விருத்தாசலத்தைத் தரிசித்தார். ஒப்பற்ற கடுந் தவம் புரிந்த பதஞ்சலி வியாக்கிரபாத முனிவருக்காகச் சிவபெருமான் எல்லையில்லாத பெருங் கருணையோடு ஆனந்தத் தாண்டவம் புரிந்தருளும் திருத்தில்லையம்பதியைத் தரிசித்தார். அகத்திய முனிவரின் கமண்டலத்தினின்றும் பெருகி வேறு வேறாகப் பிரிந்து பற்பல பெயர்களைத் தாங்கிச் செல்லும் காவிரியாற்றின் வட கரையில் உள்ள மண்ணியாற்றங் கரையை அடைந்தார்.

முருகப் பெருமான் மண்ணியாற்றங்கரையை அடைந்தபோது கதிரவன் தன் கிரணங்களை ஒடுக்கிக் கொண்டு மேலைக் கடலில் மறைந்தான். அப்போது சிவப்பு வானம் பிட்சாடன வடிவங் கொண்டு வந்த சிவபெருமானைப் போல் விளங்கியது. தாருக வனத்தின் தோற்றம் போல் இருந்தது இருள்; தாருக வனத்து மாதர்களைப் போல் விண்மீன்கள் மயங்கி நின்றன. சிவபெருமான் திருக்கரத்திலேந்திய பிரம கபாலத்தைப் போல் தோன்றியது இளம்பிறை.

மிக்க தாருக வனத்தினை
ஒத்தது விசும்பல்
நோக்க பேரிருள்: மாதரோத்
தன உடுத் தோற்றம்:
சேக்கர் சசியை ஒத்தது:
ஒண் போனகஞ் சேர்ந்த
கைக்க பாலம(து) ஒத்தது
கதிரிளம் பிறையே

இச்சமயத்தில் பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்கள் குமாரக் கடவுளை வணங்கி, ''எம்பெருமானே! இந்த ஆற்றங் கரையெல்லாம் மணற்குன்றுகள் மலிந்துள்ளன; மலர் வனங்கள் நிறைந் தன; எண்ணிலாத சிவஸ்தலங்கள் இருக் கின்றன. ஆகவே, இந்த நதிக் கரை



யில் எழுந்தருளுக'' என்று வேண்டிக் கொண்டார்கள். முருகப் பெருமான் அதற்கிணங்கித் தேவதச்சனைக் கொண்டு மண்ணியாற்றங் கரையில் கவின் மிக்க நகரம் ஒன்றை அமைத்துக் கொண்டு எழுந்தருளினார். தேவர்கள் அந்நகருக்குத் திருச்சேய்ஞலூர் எனப் பெயரிட்டார்கள். இதனைக் குமார புரி என்று வட மொழியில் கூறுவர்.

தாரகன் கிரௌஞ்ச மலையுடன் அழிந்ததை எண்ணிய இந்திரன் துயர் நீங்கி மகிழ்ந்திருந்தான். அப்போது சீர்காழியில் உள்ள வனதேவதை இந்திரனை வந்து வணங்கியது. ''தேவர் கோமானே! நீ இந்திராணியுடன் சீர்காழியில் தங்கித் தவம் செய்தபோது என்னிடம் இந்திராணியின் ஆபரணங்களை எடுத்துக் கட்டி அடைக்கலமாகக் கொடுத்து வைத்தீர்கள். அதை இப்போது ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று ஆபரணக் கிழியை அமரேசனுக்கு அளித்தது. இந்திராணியின் ஆபரணங்களைக் கண்ட அளவிலேயே இந்திரனுக்கு விரகம் மேலிட்டது. இரவு முழுவதையும் ஒரு பூஞ்சோலையின் புறத்தேயுள்ள மணற் குன்றில் தாபத்துடன் கழித்தான் தேவராஜன்.

சூரியோதயம் ஆயிற்று. இந்திரன் பதைபதைத்தான். 'முருகக் கடவுளுடன் இருக்கும்போது எனக்குக் காம உணர்வு வந்ததே' என்று வருந்தினான். காமம் செய்யும் தீமைகள் அனைத்தையும் உணர்ந்த இந்திரன் அங்கிருந்து நீங்கித் தேவர்கள் சூழச் சென்று குகப் பெருமான் சந்நிதியை யடைந்து வணங்கித் துதித்தான்.

இந்திரனை நோக்கிய கந்தவேள், ''நாம் சிவபெருமானைப் பூசிக்க விரும்புகிறோம். பூசைக்கு வேண்டிய உபகரணங்களை வருவிக்கக் கடவாய்'' என்று பணித்தருளினார். இந்திரனின் பாவம் தொலையவே, சிவப் பணியில் ஈடுபடுத்தினார் போலும்!

பூசைக்கு வேண்டிய திவ்விய தீர்த்தம், நறுமலர், பீதாம்பரம், சந்தனம், திருவமுது, தூபம், தீபம் முதலியவைகளை இந்திரன் உடனே தருவித்தான். முருகப்பெருமான் தேவதச்சனைக் கொண்டு சிவபெருமானுக்கு ஒரு திருக்கோயில் அமைத்துச் சிவாகம விதிப்படி சிவலிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டு வலம்வந்து வணங்கித் துதித்தார். பக்தர்களின் பூசனை யாவையும் பெற்றருளும் பரமேசுவரன் தமது மறு உருவான ஆறுமுகன் புரிந்த ஆராதனையில் உவகை யுற்றார். சிவபெருமானுக்குக் கந்தவேள் புரிந்த பூஜையை விடப் புண்ணியமும், அழகும், அநுபூதியும் நிறைந்த வழிபாடும் உண்டா?

உமாதேவியாரோடு இடபத்தின் மீது ஈசுவரர் தோன்றியருளினார். குமாரக் கடவுளும் இலட்சத்தொன்பது வீரர்களும், தேவர்களும் சிவபெருமானைத் தரிசித்து மனங் கசிந்துருகித் துதித்தார்கள். சிவபெருமான் தமது திருமைந்தரை நோக்கி, ''உன் வழிபாட்டுக்கு மகிழ்ந்தோம்; நீ இதனைப் பெற்றுக் கொள்'' என்று கூறி உலகம் முழுவதையும் ஒரு நொடியில் அழிக்க வல்ல சர்வ சங்காரப் படையென்னும் உருத்திர பாசுபதப் படைக்கலத்தைக் கொடுத்தருளினார்.

''மைந்தனே! இது நம்மிடத்தே தோன்றிய படைக்கலம்; பிரம விஷ்ணுக்களும் இதனைப் பெற்றிலர்; இதனைத் தாங்கவல்லவன் நீயன்றி வேறு ஒருவரும் இலர்; இது சூரபன்மனுடைய அளப்பற்ற சேனையை அழிக்க வல்லது'' என்று திருவாய் மலர்ந்தார்.

சிவபெருமான் மறைந்த பின்னர் கந்தவேள், அங்கிருந்து தேரில் புறப்பட்டார். தேவரும், பூதரும், வீரரும் புடைசூழக் காவிரியைக் கடந்து திருவிடைமருதூர், மாயூரம், திருப்பறியலூர் முதலிய சிவஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு உலையில் காய்ந்த இரும்பு போன்ற மிகுந்த வெப்பம் கொண்ட பாலைவனத்திலே சென்றார். உடனே அது நறுமலர்ச் சோலைபோல் குளிர்ச்சியுடையதாயிற்று. புறச் சமய நெறியில் புகுந்து அலைகின்றவர்களுக்குச் சிவபெருமான் திருவருள்பாலித்த பொழுது பொறிபுலன்கள் மாறுபட்டன போல, அப் பாலைவனம் பால முருகனின் பரிசம் பட்டதும் குளிர்ந்த மலர்ச் சோலையாக மாறி மகிழ்ச்சி தந்தது.

**புறநெ றிக்கணே வீழ்ந்துளோர்**
**சிவனருள் புகுங்கால்**
**அறிவும் ஆற்றலும் குறிகளும்**
**வேறுபட் டனபோல்**
**வறிய செந்தழல் வெவ்வனம்**
**வேலவன் வரலால்**
**நறிய தண்மலர்ச் சோலையாய்**
**உவகை நல்கியதே**

வெம்மை நீங்கிய அப்பாலைவனத்தில் கந்தவேள் சென்று கொண்டிருப்பதைத் திருப்பரங்குன்றிலே தவம் செய்து கொண்டிருந்த பராசர முனிவரின் புத்திரர்களாகிய தத்தர், அநந்தர், நந்தி, சதுர்முகர், சக்ரபாணி, மாலி என்னும் அறுவரும் ஞானநோக்கினால் அறிந்து, வடதிசை நோக்கி வந்து கந்தக் கடவுளை எதிர்கொண்டு சென்ற

னர். கந்தப் பெருமானைக் கண்டதும் கழலிணைகளில் வீழ்ந்து வணங்கினர்.

ஆறுமுகக் கடவுளைச் சரவணப் பொய்கையிலிருந்து எடுத்தபோது அகிலாண்ட நாயகியின் திருப்பால் வெள்ளமாய்ப் பெருக அதனை மீனுருவில் இருந்து உண்டு சுயரூபம் பெற்ற தவச் செல்வர்களே இவ்வறுவரும்.

இவர்கள்சிவாக்ஞையை மேற்கொண்டு திருப்பரங்குன்றத்துக்குச் சென்று தவம் செய்து கொண்டிருந்தார்கள். கந்தவேள் பராசர முனிவருடைய புதல்வர்களுக்குப் பூரண அநுக்கிரகம் புரிந்தார். அதன் பின் கந்தக் கடவுள், சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் திருச்செங்குன்றூர் (திருச்செங்கோடு) அடைந்து, சிவபெருமானைத் தரிசித்துக் கொண்டு, கடற்கரையில் உள்ள ஒரு திவ்விய ஸ்தலத்துக்கு எழுந்தருளினர்.

அதுவே அலைவாயாகிய திருச்செந்தூர். 'என்னிடம் வருபவர்கள் சம்ஸாரக் கடலைத் தாண்டி விடுவார்கள்' என்று உலகுக்கு அறிவிக்குமுகமாகவே இங்கு பெருமான் கடற்கரையில் கோயில் கொண்டுள்ளார் என்றும், அலைகள் யாவும் எப்படிக் கரையில் அடங்கி விழுகின்றனவோ அவ்வாறே அலைவாய் ஸ்வாமியின் அடிபணிந்தவரின் ஆபத்துக்கள் அடங்கிப் போகும் என்றும் ஸ்ரீ ஆதிசங்கரர் 'சுப்பிரமணிய புஜங்க' த்தில் போற்றுகிறார். அரும் பெரும் அறுமுக ஸ்தலம் திருச்செந்தூர். அங்கு தேவதச்சனைக் கொண்டு ஒரு திருக்கோயில் அமைக்கச் செய்து அக்கோயிலினுட் புகுந்து, வீரர்களும் பூத சேனாதிபதிகளும் துதிக்க மணியாசனத்தில் வீற்றிருந்தருளினர் கந்தவேள். கடற்கரையில் கருணைக் கடலாக எழுந்தருளினர். அப்போது கந்தருவர்கள் யாழ் வாசித்தனர். தேவர்கள் பூமழை பொழிந்தனர். வாயுக்கள் வெண்சாமரம் வீசி நின்றனர். அக்கினியும், வருணனும், வெண் குடை பிடித்து நின்றனர். வீரவாகு தேவர் உடைவாள் பற்றி நின்றார். மற்றைய இலட்சத்து எண்மரும் தலைவாயிலில் துதித்துக்கொண்டு நின்றார்கள்.

செந்திலம்பதியில் வீற்றிருந்த குமாரக் கடவுள் ஒன்றும் அறியாதவர் போல் இந்திரனை நோக்கி, ''சூராதி யவுணர்கள் பிறந்ததும், தவம் செய்ததும், அவர்களது வீரமும், உங்களுக்கு அவர்கள் இழைத்த தீமையுமாகிய எல்லாவற்றையும் நமக்கு விரிவாகச் சொல்லக் கடவாய்'' என்றார்.

தேவகுருவாகிய வியாழ பகவானை நோக்கிய இந்திரன், ''தாங்களே இவற்றைச் சொல்லி யருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். வியாழ பகவான் அதற்கு இணங்கி, முருகப் பெருமான் திருவடிகளை வணங்கி அந்தக் கதையைக் கூறலானார். **(தொடரும்)**

## சுவர் ஒட்டி தினசரிகள்





அநேக உயர்நிலைப் பள்ளிகளிலே இது ஒரு நல்ல பழக்கமாக இருந்து வருகிறது. பள்ளியில் நுழைந்ததும் அல்லது தலைமை ஆசிரியரின் அறைக்கு வெளியே ஒரு கரும் பலகையில் அன்றைய தினசரியின் முக்கிய சாராம்சத்தை எழுதி வைப்பார்கள். கிராமத்தின் முக்கியத்துவம் மாத்திரமல்லாமல் நகரம், ஜில்லா, மாகாணம், தேசம், உலகம் இவைகளின் பிரத்தியேக சம்பவங்களையும் பிரித்து எழுதப்பட்டிருக்கும். ஒருசில நிமிடங்களில் ரசித்துக் கொள்ள முடியும் அன்றைய 'நியூஸ்'.

எழுதப் படிக்கத் தெரியாத மக்கள் நமது நாட்டில் இன்றும் அநேகர் உளர். தினசரிகள் மலிந்து கிடக்கும் இந்தக் காலத்தில் கூடக் கேட்டுத் தெரிந்து கொள்ளக் கூடியவர் பலர். கொஞ்சம் நஞ்சம் எழுத்துக்கூட்டிப் படிப்பவர்களும் உண்டு. 'சுவரொட்டித் தினசரி' கிராமத்தின் ஒரு மையமான இடத்திலோ அல்லது கிராம மக்கள் எல்லோரும் தவறாமல் பார்த்துப் போகக் கூடிய ஓர் இடத்திலோ நிறுவி வைப்பது மிகவும் நலமாயிருக்கும். இன்றைக்கும்கூட சீனாவிலே இது ஒரு பழக்கமாக இருந்து வருகிறது என்று கூறப்படுகிறது. வர்த்தமானம் பிரசுரம் செய்வது பொதுப் படையான கருத்துடையதாகவும், ஒருவர் கைப்படவும் படங்கள் அடங்கியதாகவும் இருப்பது நலம். நிறுவவேண்டிய இடம் நாலு பேர்கள் கண்களில் படக் கூடியதாகவே இருத்தல் மிக அவசியம். அசோகர் தம் புத்திமதிகளைப் பிரசுரம் செய்த காலத்தில் ஊருக்குள்ளே நுழையும்போது நிற்கும் பாறைகளின் மேல் அடித்து வைத்தாராம்.

— எல். சி. ரிச்சர்ட்

# ஜீவகீதம்

ஜெகசிற்பியன்

அத்தியாயம் எட்டு

## படுக்க ஓர் இடம்

இரவு மணி பதினொன்று. திருவல்லிக்கேணி போலீஸ் நிலையத்திலிருந்து வெளியே வந்தான் சபேசன். அவன் முகம் அழுது அழுது வீங்கிப் போயிருந்தது. ஆனால் அப்படி அழும்படியாக அவனுக்கு அங்கு எவ்விதத் துன்பமும் நேரவில்லை. போலீசார் அவனை உருட்டி மிரட்டிப் பலவிதமான கேள்விகள் கேட்டு விசாரணை நடத்திய பின், 'பர்மா அகதியான அந்த இளைஞன் பொதுக் கூட்ட மேடையில் பாதரட்சையை வீசியெறிந்து அமைதிக்குப் பங்கம் விளைவித்திருக்க மாட்டான்; வேறு எவனோ ஒரு கருங்காலி அக்காரியத்தைச் செய்து தப்பித்துக் கொள்ள, இவன் தவறுதலாகப் பிடிக்கப்பட்டான்' என்ற முடிவோடு





வெளியில் அனுப்பி விட்டார்கள். அநாதரவான நிலையில் தாய்நாட்டுக்கு ஓடி வந்த பின்னும் விதி தன்னை விடாமல் இப்படியெல்லாம் வீணான சங்கடங்களுக்கு உட்படுத்தி வேடிக்கை பார்க்கிறதே என்பதை நினைத்துத்தான் அவன் விம்மிப் பொருமி அழலானான். அத்துடன், தன்னிச்சையாகத் தன் காலை ஊன்றி ஒரு நாள் பொழுதைக் கழிப்பதற்குள்ளாகவே இவ்வளவு ஏமாற்றங்களும் இடுக்கண்களும் எதிர்ப்பட்டு விட்டன என்றால்

இன்னுமுள்ள வாழ்நாட்களில் எத்தனை யெத்தனை பேரிடிகளையும் பெரும் புயல்களையும் சந்திக்க நேரிடுமோ என்ற அச்சமும் தோன்றி அவனை ஒரேயடியாகக் குழப்பிப் புலம்ப வைத்து விட்டது.

கண்களைத் துடைத்துக் கொண்டு, எதிரே விசாலித்துக் கிடந்த சாலையை ஏறிட்டுப் பார்த்தான். கடை கண்ணிகளெல்லாம் சாத்தப்பட்டு ஜன நடமாட்டமும் அடங்கி விட்டிருந்தது. இதனால், இவ்வளவுநேரம் அவன் மனத்தில் குடிகொண்டிருந்த கலக்கம் நீங்கியிருந்தாலும் இப்போது வேறொரு கவலை சூழ்ந்துகொண்டது. 'இந்த நேரத்தில் எங்கே போவது, எவ்விடத்தில் படுப்பது, இரவுச் சாப்பாட்டுக்கு என்ன செய்வது?'

பசி வயிற்றைக் கிள்ள, பயம் நெஞ்சைப் பிடித்து உலுக்க, போலீஸ் நிலயத்தின் மதில் சுவர் ஓரமாக நின்றிருந்த அவன் சுற்றுமுற்றும் பார்த்தவாறு மெல்லச் சாலையில் இறங்கினான்.

''இன்னா தம்பி, இப்போதான் வர்றியா ?''

சபேசன் சட்டென்று நின்றான். சாலையோரம் இருந்த தூங்குமூஞ்சி மரமொன்றின் பின்னாலிருந்து வெளிப்பட்ட நச்சி அவனை நோக்கித் தயங்கித் தயங்கி வந்தான்.

நச்சியைக் கண்டதுமே சபேசனுக்கு அசாத்திய கோபம் வந்து விட்டது. அந்த இடத்திலேயே அவனை அடித்து நொறுக்கிக் கிடத்திவிட வேண்டும் என்ற ஆத்திரமும் குமுறிப் பொங்கியது. முரட்டுக் காளைபோல் திமிறித் திரும்பி அவனை முறைத்து வெறித்துப் பார்த்தான் அவன்.

''தம்பிக்கு என் மேலே ரொம்பக் கோவமாயிருக்கும்: அடிக்கிறதுன்னு ஓர் அடி அடிச்சுக்கோப்பா !'' என்று குறும்புச் சிரிப்புடன் கூறிக்கொண்டே வந்த நச்சி, தலை குனிந்து முதுகை அவன் பக்கமாகத் திருப்பிக் காட்டினான். பிறகு சட்டென்று நிமிர்ந்து, ''வேண்டாம் ! இப்போ என்னை அடிக்கிறதுக்கு உன் உடம்பிலே பெலம் இருக்காது: ரொம்பவும் களைத்துப் போயிருப்பே. வா, ஓட்டல்லே எதனாச்சும் சாப்பிட்டுட்டு அப்புறமா என்னை என்ன வேணுமானாலும் பண்ணிக்க!'' என்று கூறினான்.

சபேசனின் சீற்றம் பன்மடங்காகியது. ஆயினும் தன்னை வெகுவாக அடக்கிக் கொண்டு, ''அண்ணே, உனக்கு ஒரு கும்பிடு ! தயவுசெய்து என்னை விட்டுவிடு!'' என்று அழுகையும் ஆத்திரமும் தொண்டையை அடைக்கக் கூறி முகத்தை வெடுக்கென வேறு பக்கம் திருப்பிக்கொண்டான்.

''என்னைக் கண்டதுமே நீ இப்படித்தான் சொல்லுவேன்னு நினைச்சேன். பரவாயில்லே, சொல்லு. கோவிச்சுக்க மாட்டேன்'' என்றவாறு அவன் தோளில் கை போட்டான் நச்சி.

சபேசனுக்கு நெஞ்சு எரிந்தது. வெறுப்புடன் தோளைக் குலுக்கி அவன் கையைத் தட்டி விட்டான்.

அப்போதும் சிரித்துக் கொண்ட நச்சி, சுற்றிலும் திரும்பிப் பார்த்துவிட்டு, ''சரி; நாம் இங்கேயிருந்து பேச வேண்டாம். எவனாவது போலீஸ்காரன் வந்து தள்ளிக்கிட்டுப் போயிடுவான். அந்தண்டைப் பிளாட்பாரத்துக்கு வா, சொல்றேன்'' என்றபடி சபேசனைப் பலவந்தமாகப் பிடித்து அழைத்துக் கொண்டு மறுபக்க நடைபாதைக்குச் சென்றான். அங்கு சென்றதும் எதையோ மறந்திருந்தவன் போல் சட்டென்று சிகரெட்டொன்றை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு, 'ஸ்டைலா'க இடுப்பின் மேல் கைகளை ஊன்றி ஒருக்களித்துச் சாய்ந்து புருவங்களை உயர்த்தி, ''ஆமாம்; இப்போ நீ இன்னா சொல்றே, பிரதர் ?'' என்று அமைதியாகக் கேட்டான்.

சபேசனால் தன் ஆத்திரத்தை அடக்க முடியவில்லை. ''நீதான் சொல்ல வேண்டும்! அந்தப் பொதுக் கூட்டத்தில் பேசியவரின்மீது நானா பாதரட்சையை வீசியெறிந்தேன்? நீ கண்ணால் பார்த்தாயா? ஒரு பாவமும் அறியாத என்னை ஏன் போலீஸாரிடம் பிடித்துக் கொடுத்தாய்? உன்னை நம்பி உன் பின்னால் சுற்றிக் கொண்டிருக்கும் அநாதையான எனக்கு இப்படித்தான் நீ உதவி செய்வதா?'' — அவனுடைய கோபம் அழுகையாக மாறியது.

''என்ன செய்யறது தம்பி? உன்னைப் பிடிச்சுக் கொடுக்காமலிருந்தால் இந்நேரம் என்னையில்லே தள்ளிக்கிட்டுப் போயி உள்ளே போட்டிருப்பாங்க?'' என்று அலட்சியமாகக் கூறி முகத்தைச் சுளித்தான் நச்சி.

''உன்னை ஏன் பிடிப்பார்கள்? நீயா அந்தக் காரியத்தைச் செய்தாய்?''

''பின்னே, யாருன்னு நினைச்சயாம்!''

திடுக்குற்ற சபேசன் அவனைத் திருதிருவெனப் பார்த்து விழித்தான்.

''ஆமாம், தம்பி! நான்தான் அந்தக் கயிலாத்து வேலையைச் செய்தேன். போலீஸ்காரங்களும் ஜனங்களும் என்னைப் புடிக்க ஓடியாந்தாங்க. கப்பால்னு அவங்களுக்குப் போக்குக்

"ப்ரின்ஸ் பிளேடு
சிறகைப்
போன்ற
மென்மை தரும்
பிளேடு"

கரடுமுரடான தாடியுடைய ஒருவர் சொல்வதைக் கேளுங்கள்—ப்ரின்ஸ் பிளேடினுல் க்ஷவரம் செய்து கொள்வது ஒரு சிறகை உபயோகிப்பது போன்றதாகும்! அவ்வளவு மழமழப்பானது...அவ்வளவு சுத்தமானது... அவ்வளவு இதமானது...உங்கள் ரேஸர் மயிர்க்கால்களினூடே சென்று, அந்தப் பரவசமான தூய்மையின் உணர்வை உங்களுக்குத் தருகிறது... ப்ரின்ஸ் பிளேடின் விசேஷ ப்ளூரோ கார்பன் ஓரம் தான் இதற்குக் காரணம்.

மேலும், ப்ரின்ஸ் பிளேடினுல் அதிகமான க்ஷவரங்கள் செய்து கொள்ளலாம். இந்த, மேலும் மேலும் அதிகமான மனிதர்கள் ப்ரின்ஸ் பிளேடை உபயோகிக்கின்றனர்...நீங்கள் இதுவரை பார்த்துக்கொண்டிருந்தாலும், உடனே ப்ரின்ஸ் பிளேடு உபயோகிக்க ஆரம்பியுங்கள்.




# ப்ரின்ஸ் பிளேடு



ப்ளூரோ கார்பன் ஓரம் கொண்டது

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: மூல்லர் & பிப்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

காட்டி டபாய்ஞ்சுக்கிட்டு உன்னைப் புடிச்சுக் கொடுத்துப்பிட்டேன்.''

சபேசன் சட்டென்று குனிந்து நச்சியின் கால்களைப் பார்த்தான். அன்றெல்லாம் சிங்கப்பூர் சிலிப்பர் அணிந்திருந்த அவனுடைய கால்கள் இப்போது வெறுமையாயிருந்தன. பீதியுடன் அவனை வெறித்து நோக்கி, ''எதற்காக இந்த அநியாயக் காரியத்தைச் செய்தாய்?'' என்று குமுறிக் கேட்டான்.

''எதுக்கா? இதோ பார், தம்பி! இதுக்குத்தான்!'' என்று கூறிக் கடகட வெனச் சிரித்த நச்சி, தன் ஜேபியிலிருந்து ஓர் ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து அவன் கண்ணுக்கு நேரே தூக்கிக் காட்டினான். ''நாம் பஸ்ஸிலே வருகிறப்ப அந்த மப்ளர்காரர் மருதமுத்து என்கிட்டே வந்து ரகசியம் பேசினாரே, அது இன்னான்னு நினைச்சுக்கிட்டு இருக்கிறே? அவர்தான் அந்தக் காரியத்தைச் செய்யச் சொல்லி எனக்கு ஐஞ்சு ரூபா கொடுத்தார். சும்மா இனாம் கொடுத்தாரா? இல்லை; ஐஞ்சு கொடுத்து இருபத்தைஞ்சு சம்பாரிச்சுட்டார். ஆமாம், தம்பி! அரைப் பைசா பெறாத என் செருப்பை அவர் அங்கேயே ஏலம் போட்டார்; தலைவர் மேலே வீசிய செருப்பு இல்லையா? எவனோ ஏமாந்த சோணகிரி அதை இருபத்தைஞ்சு ரூபா கொடுத்து வாங்கி வைச்சுக்கிட்டான், பூசை போட! சுதந்திர இந்தியாவிலே அரசியல்வாதிகளுடைய போக்கைப் பார்த்தியா? எல்லாம் பிசினஸ்! எதைச் சொன்னாலும் எதைச் செய்தாலும் ஏமாறுகிறதுக்கு ரெடியாயிருக்கிறாங்க நம்ம செம்மறியாட்டு சனங்கள்!'' — நச்சிக்கு ஒரே சிரிப்பு. அவன் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தான்.

திகிலும் திகைப்புமாக அவனை விழித்துப் பார்த்துக் கொண்டிருந்த சபேசன், ''அப்படியானால் அந்த மப்ளர்காரருக்கும், மேடையில் பேசிய பேச்சாளருக்கும் ஏதாவது விரோதமா?'' என்று தணிந்த குரலில் வினவினான்.

''எதுக்கு இப்படிக் கேட்கிறே, தம்பி?''

''விரோத குரோதம் இருந்தால்தானே இம்மாதிரி பணம் கொடுத்து அடிக்கச் சொல்வார்கள்?''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லை; ரெண்டு பேரும் தோஸ்துகள்தான்! இன்னும் சொல்லப் போனால் அவர் குரு; இவர் அவரோட சிஷ்யர் — ஒரே 'சார்பட்டா' பரம்பரை! நான்தான் முதலிலேயே சொல்லிப்பிட்டேனே, எல்லாம் பிசினஸ்! அவங்களுக்குப் பணம் வேணும்; எனக்கும் இன்னைக்குப் பணம் வேணும். ஊட்டுக்குப் போறதுக்கு ரெண்டு ரூபாவாவது கையிலே இருக்கணும். நீ வேறே என் பின்னாலே சுத்திக்கிட்டு இருக்கிறே. உனக்கு ராத்திரிச் சாப்பாட்டுக்கு வழி பண்ணியாகணும். இதுக்கெல்லாம் நான் இன்னா செய்வேன்? அதான் இந்தச் சான்ஸை விடாமல் பூந்து விளையாடிப்பிட்டேன்.''

''ஓகோ! எனக்கு நீ உதவி செய்கிற லட்சணம், என்னைப் போலீஸில் பிடித்துக் கொடுப்பதுதானா?''

''எல்லாம் யோசிச்சுத்தான் செஞ்சேன், தம்பி! நான் மாட்டிக்கிட்டேன்னா ஜெயிலே வெளியில் வர முடியாது. என் பேரு அங்கே ரிக்கார்டிலே இருக்குது. அதுக்குத்தான் உன்னை மாட்டி விட்டேன். பர்மாவிலேயிருந்து ஓடியாந்திருக்கிற நீ அந்தக் காரியத்தைச் செய்திருக்கமாட்டேன்னு உன்னைப் போலீஸ்காரங்க விட்டுப்பிடுவாங்கன்னு எனக்குத் தெரியும். இல்லாட்டி இவ்வளவு நேரம் உனக்காக இங்கே வந்து காத்துக்கிட்டு இருப்பேனா?''

சபேசன் அவனை ஆச்சரியத்துடன் உற்று நோக்கினான்.

''தம்பி, நீ சின்னப் பையன். இந்த ரோசங்கெட்ட உலகத்தைப்பத்தி இன்னும் நீ சரியாப் புரிஞ்சுக்கிட்டு இருக்கமாட்டே. இங்கே ஒழுங்கா, சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு, ஞாயமா வாழுறவனுக்கு இடமில்லை. அடாவடித்தனம் பண்ணி, ஆட்டைத் தூக்கி மாட்டு மேலே போட்டு மாட்டைத் தூக்கி மனுஷன் மேலே போடறவன்தான் பொழைக்க முடியும். இந்தா, இது உன் பங்கு; நான் சம்பாரிச்ச ஐஞ்சு ரூபாயிலே ரெண்டு ரூபாய் உனக்குச் சேரணும். நீயும் இதுக்காகக் கஷ்டப்பட்டு இருக்கிறே இல்லையா? என் செருப்புக்குன்னு எட்டணா சேர்த்து எனக்கு மூணு ரூபா கொடுத்துப்பிடு. கணக்கு சரிதானே?'' என்று சிரித்துக் கொண்டே சொன்ன நச்சி, தன்னிடமிருந்த ஐந்து ரூபாய் நோட்டைச் சபேசனின் ஜேபியில் திணித்தான்.

''இல்லை, அண்ணே! நீ சொல்வதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது. 'எல்லாரும் நியாயம் தவறி நடக்கிறார்கள், அதனால் நாமும் அப்படித்தான் நடக்க வேண்டும்' என்று நினைப்பதே தவறு. நாம் ஒழுங்காக நடந்து கொண்டால் போதும்; மற்றவர்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. கண் இல்லாதவன் கம்பத்

டிலே போதிக் கொள்கிறான் என்றால் நாமும் போய் அப்படி மோதிக்கொள்ள வேண்டுமா என்ன?''

''பிரதர்! நீ ரொம்ப நல்லாப் பேசறே! இரு இரு. எங்களுக்கும் ஒரு மேடையிலே உன்னை ஏத்திப் பேச வைச்சு வேடிக்கை பார்க்கிறேனா இல்லையா, பாரு!'' என்று கூறி நகைத்தான் நச்சி.

சபேசனுக்கும் சிரிப்பு வந்து விட்டது. அவன் வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டான்.

''சரி, சரி; சீக்கிரமாப் போய் அந்த மிலிட்டரி ஓட்டல்லே எதனாச்சும் சாப்பிட்டுட்டு வா. அது ராத்திரிக்கெல்லாம் திறந்திருந்தாலும் பன்னண்டு மணிக்கு மேலே சோறு கிடைக்காது. ஓடு, ஓடு!'' என்று சொல்லிக்கொண்டே சாத்திக் கிடந்த ஒரு ஜவுளிக் கடையின் படிமீது உட்கார்ந்தான் நச்சி.

''நீ வரவில்லையா அண்ணா?''

''இன்னைக்கு நான் ஊட்டுக்குப் போகணும். நீ போய்ச் சாப்பிட்டு விட்டு வா.''

சபேசன் ஹோட்டலை நோக்கி விரைந்தான்.

ஓர் அரை மணி நேரம் கடந்திருக்கும். வயிறும் மனமும் குளிர வெளியே வந்தான் சபேசன். வயிறு நிறைந்ததும் தூக்கம் அவன் கண்ணைக் கரித்தது. தூங்க வேண்டுமென்ற உணர்வு தட்டியதுமே, எங்கே படுப்பது என்ற கவலையும் உடன் சேர்ந்துகொண்டது. உண்ட களைப்பும் உறக்கச் சோர்வுமாக நச்சி இருந்த இடத்துக்கு வந்தான்.

கால்களைக் கட்டிப் பிடித்து முகத்தை முட்டிகளில் புதைத்துக் கொண்டு சவம் போல் உட்கார்ந்திருந்தான் நச்சி. அங்கு சபேசன் வந்ததைக்கூட அவன் அறியவில்லை.

''அண்ணா, போகலாமா?''

நச்சிதலைநிமிராமலேகுந்தியிருந்தான்.

''என்ன அண்ணா, உட்கார்ந்தபடியே தூங்கி விட்டாயா? இந்தா, மூன்று ரூபாய்!''

அவன் தூங்கவில்லை. சிந்தனையில் ஆழ்ந்திருக்க வேண்டும். மௌனமாக எழுந்து நடக்க ஆரம்பித்தான்.

அவனுடைய அந்தப் போக்கு சபேசனுக்கு விந்தையாயிருந்தது. அவனும் மௌனமாக அவனைப் பின் தொடர்ந்தான். இருவரும் மௌண்ட் ரோடு வழியே சென்ட்ரலை நோக்கி நடந்து கொண்டிருந்தனர்.

ஓர் ஆங்கிலத் தினப் பத்திரிகைக் காரியாலயத்தைக் கடந்து பெரிய







தொழிற்சாலை யொன்றின் ஓரமாக நடந்து கொண்டிருந்த நச்சி ஒரு விளக்குக் கம்பத்தினடியில் சட்டென்று நின்று, பின்னால் வந்த சபேசனின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். சபேசனும் அவனை ஏறிட்டு நோக்கினான்.

''ஏன் தம்பி, போலீஸ் ஸ்டேஷனிலே உன்னை அடிச்சாங்களா?'' என்று கரகரத்த குரலில் வினவினான் நச்சி.

''ஆமாம், அண்ணே! கடற்கரையிலிருந்து என் கையைக் கட்டி அழைத்து வந்த போலீஸ்காரர்களில் ஒருவர் ஸ்டேஷனுக்குள் நுழைந்ததும் இன்ஸ்பெக்டருக்கு எதிரே என்னைத் தள்ளினார். இன்னொருவர் 'பளீர்' என்று கன்னத்தில் ஓர் அறை விட்டார். அப்புறம்தான் விசாரணை ஆரம்பமாகியது. இன்ஸ்பெக்டர் ரொம்பவும் நல்லவர். அதற்குப் பின் என்னை யாரும் எதுவும் செய்யவில்லை.''

நச்சி தலைகுனிந்து கொண்டான். சபேசன் தொடர்ந்து சொன்னான். ''ஒரே ஓர் அறைதான் கிடைத்தது. அதற்காக நான் வருத்தப்படவில்லை. இம்மாதிரி விஷயங்களில் அடி உதைதான் உண்மையைக் கொண்டு வரும். அது அவர்கள் கடமை. இன்னும் சொல்லப் போனால் அந்தப் போலீஸ்காரர் அறைந்த அறையினால் எனக்கு ஒரு பெரிய இன்பமும் கிடைத்தது. அதாவது, அவர் விட்ட அறையிலே என் கண்ணில் மின்னல் பொறி பறக்க, அந்த மின்னல் பொறியிலே

# மாறுட்டம் எதில்?

அன்புள்ள காந்தி அவர்களுக்கு,

முன்பின் தெரியாத என்னிடமிருந்து கடிதம் வருவது உங்களுக்கு வியப்பளிக்கக் கூடும்; விளக்கினால் நான் கடிதம் எழுதிய காரணம் புரியும். இத்துடன் நீங்கள் 'முகில்' பத்திரிகைக்கு அனுப்பிய கதையை அடக்கம் செய்திருக்கிறேன். அதே பத்திரிகைக்கு நான் அனுப்பிய என் முதல் கதை திருப்பி அனுப்பப்பட்டதுடன், உங்களுடைய இந்தக் கதையும் எப்படியோ தவறுதலாக இணைக்கப்பட்டு விட்டது; ஆவலைக் கட்டுப்படுத்த இயலாமல் நான் அந்தக் கதையைப் படித்து விட்டேன்; மன்னிக்கவும்.

அதைத் திரும்பவும் 'முகில்' பத்திரிகைக் காரியாலயத்துக்கு அனுப்பி, அவர்கள் தவறுதலாக என் முகவரிக்குக் கதையை அனுப்பி விட்டதைச் சுட்டிக்காட்டி, அவர்களையே உங்கள் முகவரிக்குக் கதையை அனுப்பச் செய்வதைவிட, நேராக நானே உங்களுக்கு அனுப்பினால், விரைவில் நீங்கள் மற்றொரு பத்திரிகைக்கு அனுப்பலாம் என்ற எண்ணத்தில் உங்களுக்கே அனுப்பிவிட்டேன்;

'காந்தி' — என்ற உங்கள் பெயர் எழுத்தாளர் உலகில் புதிதாகத் தோன்றுவதால், இதுதான் நீங்கள் எழுதிய முதல் கதை என்று எண்ணுகிறேன். என் அனுமானம் தவறானால் மன்னிக்கவும்.

இப்படிக்கு,

எழுத்தாளர் உலகில் புகமுயற்சிசெய்யும்

மணி

அன்புள்ள மணி அவர்களுக்கு,

உங்கள் கடிதமும், என் கதையும் வந்து சேர்ந்தன. கதையை அக்கறையுடன், பத்திரமாக எனக்குத் திருப்பியனுப்பிய உங்களை எப்படிப் பாராட்டுவதென்று தெரியவில்லை. உங்கள் கைபட்ட 'ராசி'யோ.... அல்லது உங்கள் 'ஆசி.....யோ' — தெரியவில்லை, என்னுடைய அந்தக் கதையை ''இமயம்'' பத்திரிகை ஏற்றுக் கொண்டு விட்டது. கதை வெளிவந்ததுகூட எனக்கு அதிக மகிழ்ச்சியில்லை. அது நன்றாக இருக்கிறது என்று நீங்கள் பாராட்டி எழுதியிருந்ததுதான் எனக்கு அதிக இன்பத்தை அளிக்கிறது... உங்கள் அனுமானம் சரியே..... இதுதான் என் முதல் கதை.

இந்த வாரம் ''பாமினி'' — இதழில், ''மணி'' என்ற பெயரில் ஒரு கதை பிரசுரமாகியிருக்கிறது. அது நீங்களாகத்தான் இருக்கும் என்று என் மனம் கூறுகிறது. உங்கள் அனுமானம் தவறாதது போலவே என் அனுமானமும் தவறாக இருக்கக் கூடாதென்று இறைவனை வேண்டுகிறேன்.

உங்கள் 'கைராசி'யில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. ஆகையால் அடிக்கடி அந்த அதிர்ஷ்டக் கையினால் எனக்குக் கடிதங்கள் எழுதப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

காந்தி

கோவை

..........

அன்புள்ள காந்தி அவர்களுக்கு,

ஏதோ நான் செய்த ஒரு சிறு செய்கை இவ்வளவு பெரிய பாராட்டுதலுக்குரியதாகும் என்று நான் கனவில்கூட எண்ணவில்லை. நான் உங்களுக்குக் கடிதம் எழுதின



# அகிலன்

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## மாலை சூட்டினாள்

கயல்விழியைக் காணத் துடித்துக் கொண்டிருந்தவனுடைய வழியில் கடமை குறுக்கிடவே, கோப்பெருஞ் சிங்கனது தூதுவன் கொடுத்த ஓலைகளை எடுத்துக் கொண்டு தன் தமையனாரிடம் சென்றான் சுந்தர பாண்டியன்.

அப்போது மாலை நேரம் மாளிகையை அடுத்திருந்த தாமரைத் தடாகத்திலிருந்து குளிர்ந்த காற்று வீசிக் கொண்டிருந்தது. குலசேகர பாண்டியரும் விழுப்பரையரும் மகா கவி கம்பரின் கவிநயத்தில் மூழ்கியிருந்தனர்.

சுந்தர பாண்டியன் அங்கு வரவே அவர்களுடைய இலக்கியப் பேச்சு தடைப்பட்டது. கோப்பெருஞ்சிங்கன் அனுப்பிய ஓலையையும், இராஜ ராஜனால் வழியில் எறிந்தெறியப் பெற்ற துணுக்குகளையும் பெரிய பாண்டியரிடம் நீட்டினான் சுந்தர பாண்டியன். ஆவேசம் நிறைந்த அவனுடைய தோற்றத்தைக் கண்டு விட்டு, "இராமபிரானின் தம்பி இலக்குமணர் போல் துடிப்போடு வந்திருக்கிறீர்களே!" என்று புன் முறுவலோடு கேட்டார் விழுப் பரையர்.

ஓலைகளை விழுப்பரையரிடம் கொடுத்தார் பாண்டியர்.

"இராஜ ராஜனுடைய சிறுமை ஒருபுறம் இருக்கட்டும்; நாம் இப்போது அதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. கோசல சாம்ராஜ் யத்தைப் பற்றித்தான் சிந்திக்க வேண்டும்" என்றார் விழுப்பரையர்.

"சோழ சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சியால் வீரநரசிம்மர் கொதிப்படைந்திருக்கிறார். அவர் தந்தை வல்லாள தேவரும் குலோத்துங்கரின் ஓலையைக் கண்டும் அவர் மரணச் செய்தி கேட்டும் அதிர்ச்சியுற்றிருக்கிறார். அடுத்த போருக்கு ஆயத்தம் செய்து கொண்டு நம்மைப் பழி வாங்கப் போகிறார்களாம். முதல் தாக்குதல் திருமுனைப்பாடி நாட்டுக்குத்தானாம். போரில் நமக்குத் துணை செய்த நம் நண்பரல்லவா கோப்பெருஞ்சிங்கன்! ஆகவே, முதலில் அவரை முறியடிக்கப் பார்க்கிறார்கள்."—ஓலைச் செய்தியையும் அதன் காரணத்தையும் கூறினான் சுந்தர பாண்டியன்

"நாம் கோசலர்களின் துணைவர்களான சோழர்களை முறியடித்தோம். அவர்கள் நம்முடைய துணைவர்களான காடவராயர்களை அழிக்கப் பார்க்கிறார்கள். அவர்களுடைய படையெடுப்பு நடந்தால் அது திருமுனைப்பாடியோடு நிற்காது!" என்றார் பாண்டியர்.

"நாம் உடனடியாகச் செய்ய வேண்டியது என்ன?" என்று கேட்டான் சுந்தரபாண்டியன்

"உடனடியாகச் செய்ய வேண்டியதை முன்னதாகவே செய்து விட்டார்கள் நம் அரசர் அவர்கள். சோழநாட்டை இராஜ ராஜனுக்கே திருப்பிக் கொடுத்து விட்டார்கள். இந்தச் செய்தி கேட்டு அவர்களுடைய சீற்றம் சிறிது தணியக் கூடும்" என்றார் விழுப்பரையர்

"சீற்றம் தணியலாம்; அதனால் படையெடுப்பும் தாமதமாகலாம். ஆனால் அவர்களுடைய அச்சம் தீராது. தெற்கில் பாண்டிய நாடு வலிமைபெற்று வளர்வதை அவர்கள் பொறுக்க மாட்டார்கள்" என்றார் பாண்டியர். அவருக்கு ராஜ ராஜனின் செய்கை மிகுந்த மனக் கலக்கத்தைக் கொடுத்து விட்டது. அதையும் அவரே வெளியிட்டார். "நாட்டைத் திருப்பிக் கொடுத்ததால் அவன் ஓரளவாவது நம்மிடம் நன்றியுடன் நடந்து கொள்வான் என்று நம்பினேன். அவனுக்கு அந்த நன்றியிருந்தால், கோசல சாம்ராஜ்யத்துடனும் நாம் நட்புறவு கொண்டு விடலாம். எப்படியும் அடுத்த போரைத் தவிர்க்கவே நான் விரும்புகிறேன்."

"தவிர்க்கமுடியாது போல் தோன்றுகிறதே!" என்றான் சுந்தர பாண்டியன்.

"ஒரே சமயத்தில் இரண்டு காரியங்களை நாம் விழிப்போடு செய்ய வேண்டும். நம்மையும் திருமுனைப் பாடி நாட்டையும் கோசல சாம்ராஜ்யத்தின் படையெடுப்பிலிருந்து பாதுகாக்க எல்லா முயற்சிகளையும்

செய்து வர வேண்டும். அதே சமயம் கோசல நாட்டோடு நட்புறவு கொள்வதற்கான எல்லா வழிகளையும் நாம் பின்பற்ற வேண்டும். போரைத் தவிர்ப்பதற்கான நடவடிக்கைகளில் நாம் தீவிரமாக முனைந்திருப்பதும் அவசியமே'' என்றார் பாண்டியர்.

''இதுவே சரியான ஆலோசனை'' என்றார் விழுப்பரையர்; ''கோசல சாம்ராஜ்யத்தின் வலிமைக்காக நாம் அஞ்ச வேண்டும் என்பதில்லை; அவர்கள் இயல்பாகவே பரந்த மனப் பண்பு கொண்டவர்கள்; அவர்களுடைய நட்பு இருந்தால் நாடெங்கும் அமைதி நிலவும்.''

சுந்தர பாண்டியனுக்கு மட்டிலும் பெரியவர்களுடைய எண்ணத்தில் நம்பிக்கை ஏற்படவில்லை. வீரநரசிம்மன் சோழ சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சியைப் பொறுத்துக் கொள்ள மாட்டார் என்றே நம்பினான். 'ஒன்று கோசல நாடு அழிய வேண்டும்; அல்லது, பாண்டிய நாடு அழிய வேண்டும்; வேறு வழியே இல்லை' என்ற எண்ணம் ஏற்பட்டது அவனுக்கு.

''சுந்தரபாண்டியா!'' என்று அன்போடு அழைத்தார் பாண்டியர்; ''இப்போது நாம் எதற்கும் அவசரப்பட வேண்டாம். ஒரு போர் முடிந்தவுடன் மறு போர் தொடங்குவது என்பது அவர்களுக்கும் எளிதான காரியமல்ல. நமக்கும் எளிதான காரியமல்ல. மதுரைக்குத் திரும்பிய பிறகு நாம் இப்போது முடிவு செய்த இரண்டு முயற்சிகளிலும் ஈடுபடுவோம். இடையில் எவ்வளவோ மகிழ்ச்சிகரமான காரியங்களெல்லாம் நடக்கவேண்டியிருக்கின்றன. வெற்றி விழாக்களும் உன் திருமண விழாவுமே நமக்கு இப்போது முதன்மையானவை. அவற்றை நாம் அடுத்துக் கவனிப்போம்.''

''ஆமாம்; நாம் பெற்றிருக்கும் வெற்றியின் அருமையையும் ஆற்றலையும் நமது மக்களிடம் முதலில் பரப்ப வேண்டும். அடுத்த போர் வருமானால் அது வரும்போது வந்து கொள்ளட்டும்! அதற்காக நம் வாழ்க்கையை நாம் மறந்து விடக் கூடாது. வாழ்க்கையின் இன்பங்களை நாமும் நமது மக்களும் சுவைக்க வேண்டும் என்பதற்காகவே நாம் போராடியிருக்கிறோம். இனியும் போராடப் போகிறோம். வாழ்க்கையின் இன்பங்களை மறக்கும் அளவுக்கு நாம் போர் வெறியர்களாகிவிட வேண்டாம்!'' என்றார் விழுப்பரையர்.

போரின் வெற்றியால் ஏற்படும் வெறித் தன்மையை விழுப்பரையர் உணர்ந்தவர். மேலும் மேலும் வெற்றிகள் என்ற முறையில் அரசர்கள் வெறியர்களாக மாறுவதுண்டு. அதைச் சுந்தரபாண்டியனுக்கு அவர் உணர்த்துவதற்காகவே அவ்வாறு கூறினார்.

சுந்தரபாண்டியனுக்கு அவனுடைய வாழ்க்கையைப் பற்றிய நினைவு வந்துவிட்டது. அங்கிருந்து நழுவிச் சென்றான்.

**மா**லை மயங்கி இரவாகிக் கொண்டு வந்தது. மாளிகையை அடுத்திருந்த தாமரைப் பொய்கையின் மூன்று கரைகளிலும் அடர்ந்திருந்த மரங்களை நோக்கிப் பறவைகள் திரும்பிக்கொண்டிருந்தன. குளமெங்கும் நீர்ப்பரப்பே தெரியாத அளவுக்குத் தாமரை மலர்களும், இலைகளும், அன்னப்பறவைகளும் நிறைந்திருந்தன. செந்தாமரைகளும் வெள்ளைத் தாமரைகளும் இணைந்து மிதந்த காட்சி சுந்தரபாண்டியனுக்குக் கண்கொள்ளாக் காட்சியாகத் தோன்றியது. அன்னங்கள் அவற்றிடையே நீந்திச் சென்ற அழகு வெண்தாமரைகளே அன்னங்களாக மாறிவிட்டனவோ என்ற மயக்கத்தைக் கொடுத்தது.

கரை ஓரமாக நடந்தவன் அடுத்திருந்த ஒரு செடிப் புதரின் மறைவில் சிறிது நேரம் தனித்திருக்க விரும்பினான். புதருக்கப்பால் இரு பெண்மணிகளின் பேச்சுக் குரல் கேட்டது. பழக்கமான குரல் என்பதால் உற்றுக் கேட்டான்.

''கயல்விழி! இனிமேல் உன்னை நான் 'அரசியாரே' என்றுதான் அழைக்கப் போகிறேன்!'' என்று விளையாட்டாகக் கூறினாள் உய்யவந்தாள்; ''அந்த நாளும் நேரமும் நெருங்கிக் கொண்டிருக்கிறதல்லவா?''

கயல்விழி அங்கிருப்பதைக் கண்டவுடன் சுந்தரபாண்டியனின் இருதயம் வேகமாக அடித்துக் கொண்டது. அதிலும் அவன் கேட்ட உய்யவந்தாளின் சொற்கள் அவனுக்கு எல்லையற்ற பூரிப்பைக் கொடுத்தன. 'நாளும் நேரமும் மட்டுமல்ல; நானும் நெருங்கி வந்து கொண்டுதான் இருக்கிறேன்!' என்று கூற நினைத்தான்.

கயல்விழியின் பதிலை அவன் கேட்கத் தவறவில்லை. அவள் குரல் ஒலித்தது.

''உய்யவந்தாளுக்கு என்னை அரசி என்று அழைப்பது ஆனந்தமாக இருக்கலாம். ஆனால் அதனால் நான் எவ்வளவு வேதனை அடைகிறேன் என்று உனக்குத் தெரியுமா? நான் என்றும் உன்னுடைய தோழியாகவும் இனிய

பாண்டியரின் பணிப் பெண்ணாகவும் இருந்தால் போதும். நான் பாணர் குலப் பெண்; பணிப் பெண்ணாகவே நான் இருக்கும் பாக்கியம் கிடைக்க வேண்டும் என்று அங்கயற்கண்ணி அம்மையை வேண்டிக் கொள். ஆசியாக வேண்டும் என்ற ஆசை இருந்திருந்தால் இதற்குள் நான் தீயில் வெந்து கருகி யிருப்பேன். அந்த எண்ணமே எனக்கு வேண்டாம்.''

''உன்னைத் தவிர எல்லோருக்குமே அந்த எண்ணமிருக்கிறது, கயல்விழி !''

''அந்த எண்ணம் எனக்கு வரவே வேண்டாம்! அவருக்குத் தெரிந்தும் தெரியாமலும் நான் பணி செய்து கொண்டிருந்தால் போதும்.''

''அவருக்குத் தெரியாமல் நீ செய்த பணி என்னவென்று நான் சொல்லட்டுமா ? இனந்தோறும் பாசறையிலே யிருந்து அவரைப் போருக்கு அனுப்பி விட்டு, அவர் திரும்பி வரும் வரையி லும் ஒவ்வொரு நாளும் மாலை மாலை யாய்க் கண்ணீர் வடித்துக் கொண்டிருந் தாய் ! நீ செய்த பணி எனக்குத் தெரியாதென்று நினைக்கிறாயா?''

''அவர் வெற்றியுடன் திரும்பி வர வேண்டுமென்று ஒவ்வொரு நாளும் அங்கயற்கண்ணி அம்மையிடம் முறை யிட்டுக் கண்ணீர் வடித்தேன். என்னை விட என்னுடைய கண்ணீர் தூய்மை யானது. அதனால்தான் அவருக்கு வெற்றி யைத் தந்திருக்கிறாள் அங்கயற்கண்ணி. என்னுடைய கண்ணீரால் மாலை தொடுத்து அதையே அவருடைய வெற்றியின் முத்தாரமாக அணிவித் திருக்கிறேன். நான் மானசீகமாக அவ ருக்கு அணிவித்திருக்கும் மாலை என் னுடைய கண்களுக்கு மட்டுமே தெரி யும். அதை இரகசியமாகக் கண்டு மகிழும் அந்த ஓர் இன்பத்துக்கு எந்த அரச போகமும் ஈடாகி விடாது. எனக்கு அது போதும்.... அது போதும் !''

மெய் சிலிர்த்தது சுந்தர பாண்டிய னுக்கு. ஆனந்தக் கண்ணீர் பொங்கத் தன் மார்பகத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டான். என்ன மாயமோ தெரிய வில்லை ! கதிரொளியால் சூல் பெற்று ஒளிரும் பனிமுத்து மாலையைப் போன்ற தொரு கண்ணீர் மாலை, அவன் கழுத்தை வளைத்துக் கொண்டிருப்பது போல் தோன்றியது. தோன்றியவுடன் மறைந்தது மின்னலைப் போல்....

''கயல்விழி!'' என்று அழைத்துக் கொண்டே அவன் நெருங்கினான்.

அவன் குரல் கேட்டவுடன் அங் கிருந்து சிட்டாய்ப் பறந்து விட்டாள் உய்யவந்தாள். மறுகணத்தில் மெய் யாகவே சுந்தர பாண்டியனின் பரந்த மார்பகத்தில் கயல்விழியின் கண்ணீர் முத்துக்கள் மாலை தொடுக்கத் தொடங்கின.

### பதின்மூன்றும் அத்தியாயம்

## அகமென்னும் போர்க்களத்தில்

கயல்விழி தன்னை முற்றிலும் மறந்த வளாய்ச் சுந்தரபாண்டியனின் மார்பகத் தில் முகம் புதைத்துத் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினாள். அங்கே பின்புறம் சூழ்ந்திருந்த சிறு புதரும் முன்புறம் பரந்து கிடந்த தாமரைக் குளமும் கயல்விழியின் மனத் துயருக் குக் காரணம் தெரியாமல் சலனமற்று அவள் துயரில் ஒன்றியிருந்தன. சுந்தர பாண்டியன் அவன் வாழ்வில் இது வரையில் இவ்வளவு துன்பத்தையும் இன்பத்தையும் ஒன்றாக அணைத்துக் கொண்டதில்லை.

கயல்விழி தன்னையே இழந்து அங்கு பாகாய் உருகிக் கொண்டிருந்தாள். சின்னஞ்சிறு குழந்தையாக மாறி விம்மி விம்மி அழத் தொடங்கி விட் டாள். தாய்ப் பசுவின் மடியில் ஒன்றும் இளங்கன்றாக மாறிப் போனாள் அவள்.

''கயல்விழி! ஆனந்தக் கண்ணீர் பெருக்க வேண்டிய சமயத்தில் நீ துன்பத் தைத் துணைகொண்டிருக்கிறாயே? உன்னை என்னால் புரிந்து கொள்ளவே முடிய வில்லை'' என்றான் சுந்தரபாண்டியன்.

''இளவரசே! இந்தப் பேதையின் நெஞ்செல்லாம், நினைவெல்லாம் உயி ரெல்லாம், உயிருக்கும் மேலான உணர்வெல்லாம் நீங்கள் எப்போதும் நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறீர்கள். இதை மட்டிலும் நீங்கள் புரிந்துகொண் டால் போதும். வேறு எதையுமே புரிந்து கொள்ள வேண்டாம். நான் எதைப் பேசினாலும் எதைச் செய்தா லும் தங்களது நலனுக்காகவே செய் கிறேன் என்பதைத் தாங்கள் உணர்ந்து கொண்டால் போதும்!''

''இப்படிக் கண்ணீர் வடிப்பதும் என்னுடைய நலனுக்காகவா?'' என்று

# பம்பாய்த் தமிழ்ச் சங்கம்

சயான் ரோடு  பம்பாய் - 22



## வெள்ளி விழா நாடகப் போட்டி

| | | | |
|---|---|---|---|
| முதல் பரிசு | ... | ரூ. | 1500 |
| இரண்டாம் பரிசு | ... | ரூ. | 1000 |
| மூன்றும் பரிசு | ... | ரூ. | 500 |

**நாடகம் அனுப்பவேண்டிய கடைசித் தேதி 31-7-65**

முகவரி: **செயலாளர், பம்பாய்த் தமிழ்ச் சங்கம், சயான் ரோடு, பம்பாய்-22**

தமிழ் நாடக மேடைக்குச் சிறந்த நாடகங்கள் கிடைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள இந்தப் போட்டியில் தமிழ் எழுத்தாளர்கள் பங்கு கொண்டு இம் முயற்சியை வெற்றியடையச் செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்.

### விதிகள்

1. மொழிபெயர்ப்பாகவோ, தழுவலாகவோ இல்லாத சொந்தக் கற்பனையில் சித்திரிக்கப்பட்ட இலக்கிய, சரித்திர, சமூக நாடகங்களாக இருக்க வேண்டும்.
2. சுமார் 3 மணி நேரம் மேடையேற்றத்தக்கதாக அமைய வேண்டும்.
3. வெள்ளைக் காகிதத்தின் ஒரு பக்கத்தில் மையினால் தெளிவாக எழுதப்பட்டோ அல்லது ''டைப்'' செய்யப்பட்டோ அனுப்பப்படும் நாடகங்களுக்கு எழுத்தாளர்கள் ஒரு நகல் வைத்துக் கொள்ள வேண்டும்.
4. தமிழ்ச் சங்கம் அமைக்கும் பரிசீலனைக் குழு பரிசுக்குரிய நாடகங்களைத் தேர்ந்தெடுக்கும்.
5. நாடகங்களைப் புத்தகங்களாக வெளியிடும் உரிமையும், நடிக்கும் உரிமையும் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்தவை.
6. நாடகத்தின் பெயர், பக்கங்கள், ஆசிரியரின் பெயர் முகவரி முதலியவற்றைத் தனித் தாளில் எழுதி நாடகப் பிரதியுடன் அனுப்ப வேண்டும்.
7. போட்டி பற்றிய எல்லா விஷயங்களிலும் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் தீர்ப்பே முடிவானது.

நாத் தழுதழுக்கக் கேட்டான் சுந்தர பாண்டியன். ''என் வாழ்நாளில் நானும் என் பரம்பரையினரும் கண்ட மாபெரும் கனவை நனவாக்கித் தந்த அந்த வீரத் திருமகள், வெற்றித் திருமகள் இப்படிக் கோழை போல் கண்ணீர் வடிக்கலாமா? என்னுடைய நெஞ்சில் நெருப்பாய்ச் சுடர் விடுபவளே, நீயே உன் கண்ணீரால் அந்த நெருப்பை அணைக்கலாமா?''

வெறி கொண்டவன்போல் அவளை நெஞ்சாரத் தழுவி அணைத்துக்கொண்டான் சுந்தரபாண்டியன்; முதல் வெற்றி தந்தவளை, அடுத்த வெற்றிகளைத் தர இருந்தவளை அவன் தனது நெஞ்சத்து மஞ்சத்தில் சிறை வைக்கத் துடித்தவன் போல் நடந்து கொண்டான்.

கயல்விழி திடீரென்று விழிப்புற்றவள் போல், மெல்ல அவன் பிடியிலிருந்து விலகிக் கொண்டாள். ''நான் இனி தங்கள் முன்பு அழப் போவதில்லை!'' என்று அழுது கொண்டே இளநகை புரிந்தாள் அவள். முத்துச் சுடரொளி காட்டிய அவள் பற்களின் ஒளியில் இனம் புரியாத இன்ப மயக்கம் கொண்டான் இளவரசன்.

''கயல்விழி! திருக்கொடுங்குன்றத்தில் மங்கையொரு பாகரின் முன்பாக நீ என் மறு பாதியாவதாக வாக்களித்தாய். பின்பு ஏலமலைக் காட்டின் நிலவில் நாம் தோணியில் சுற்றி வரும்போது, நம் திருமணம் முடிந்தவுடன் அந்த அரண்யத்துக் குடிலில் நாம் ஒன்றி வாழ வேண்டும் என்றாய். அந்தச் சித்திரா பௌர்ணமியன்றே நீ எனக்கு மலர் தொடுத்து மாலை சூட்டி விட்டாய். இனி எதற்கு எனக்குக் கண்ணீர் மாலை?'' என்று கேட்டான்.

பழைய கனவுகளை அவன் மீண்டும் நினைவூட்டத் தொடங்கவே, கயல்விழிக்குத் தன் துயரத்துக்கு அணை போட்டுக் கொள்வது மிகவும் கடினமாக இருந்தது. அந்தக் கனவுகளின் நினைவைக்கூட அவளால் இப்போது தாங்கிக் கொள்ள முடியவில்லை.

''அப்போது தாங்கள் புலவராக இருந்தீர்கள்; இப்போது அரசராக இருக்கிறீர்கள். அப்போதும் நான் விறலியாக இருந்தேன்; இப்போதும் விறலியாக இருக்கிறேன்; இனி எப்போதுமே நான் விறலிதான். விறலி அரசியாக முடியாது; அரசியாகக் கூடாது!''

> **''...என்னுடைய நெஞ்சில் நெருப்பாய்ச் சுடர் விடுபவளே! நீயே உன் கண்ணீரால் அந்த நெருப்பை அணைக்கலாமா?''**
>
> அட்டைச் சித்திரம் : **விஜு**

கயல்விழியின் சொல் ஒவ்வொன்றுமே கூர்வேலாக அவன் உள்ளத்தில் தைத்தது. என்றாலும், 'அரசியாக வேண்டும் என்ற ஆசை இருந்தால் நான் தீயில் வெந்து கருகியிருப்பேன்!' என்று உய்யவந்தாளிடம் அவள் கூறியதை நினைவில் கொண்டு, அவன் பொறுமையோடிருந்தான். பிணக்கமோ, கோபமோ கொள்ளாமல் அவளைத் தன் வழிக்குத் திருப்ப முயன்றான்.

''கயல்விழி! புலவர்களைவிட அரசர்கள் உயர்ந்தவர்கள் இல்லை. புலவர்கள் காலங் கடந்தும் வாழ்பவர்கள். மக்களின் சிந்தனையிலும், இதயத்திலும் ஒளியூட்டி நின்று அவர்களைக் காக்கும் காவலர்கள். அரச வாழ்வு அரியணையால் உயர்வு பெறுவது. ஆதலால் புலவனாகிய என்னை மணக்க விரும்பிய நீ அரசனாகிய என்னைக் கண்டு அஞ்ச வேண்டாம்.''

''புலவர்களை நான் தாழ்ந்தவர்களாகவோ அரசர்களை உயர்ந்தவர்களாகவோ நினைக்கவில்லை. இருவரும் வெவ்வேறான தன்மைகள், பழக்க வழக்கங்கள், பண்புகள் கொண்டவர்கள். ஒரு வகையில் புலவர்கள் உலக நியதிக்குக் கட்டுப்படாத விண்ணகத்துப் பறவைஇனம் போன்றவர்கள். குடிமக்களுக்கோ வேற்று நாட்டு அரசர்களுக்கோ, சுற்றத்துக்கோ, சூழலுக்கோ, சாதி குலச் சமூகத்திற்கோ கட்டுப்படாத சித்தர்கள் அவர்கள். நாட்டை ஆளும் அரசர்களோ குடிமக்களுக்குப் புற வாழ்விலும், அக வாழ்விலும் வழிகாட்டிகளாக இருக்க வேண்டியவர்கள்.''

சுந்தர பாண்டியன் கயல்விழியிடம் எவ்வளவோ எடுத்துரைத்தான். புலவர் விழுப்பரையர், பெரிய பாண்டியர், கோப்பெருந்தேவி ஆகியவர்களே திருமணத்தை நடத்த விரும்பும் போது, அவர்கள் எல்லாவற்றையுமே சீர்தூக்கிப் பார்த்துவிட்டுத்தான் முடிவுக்கு வந்திருப்பார்கள் என்றான். அவளிடம் தெளிவான சிந்தனையோடு வாதிட்டுப் பார்த்தான். — சில சமயங்களில் அவள் பதிலளித்தாள்; சில சமயம் அவள் கண்ணீர் உதிர்த்தாள், தான் அழவில்லை என்று வாக்களித்ததையும் மறந்துவிட்டு.

''இதோ பார்! சுந்தர பாண்டியனும் அவனுடைய நாடும் நலம் பெற்று வாழ வேண்டும் என்று நீ விரும்பினால் இனி

யும் என்னிடம் நீ வாதிட்டு மறுக்கக் கூடாது. நாம் மதுரையில் வெற்றி விழா முடிந்தவுடன் திருக்கொடுங்குன்றத்துக்குச் செல்கிறோம். கொடுங்குன்றத்தில் திருமணம் நிறைவேறியவுடன் ஏலமலைக் காட்டின் ஆரண்யக் குடிலுக்குப் போகிறோம். அதற்குள் அடுத்த போரும் என்னைத் தேடி வந்துவிடும்!''

''அடுத்த போரா?'' — நடுங்கினாள் கயல்விழி.

''கயல்விழி! போர்கள் இல்லாமல் அரச வாழ்வு எப்படி நீடிக்கும்? இத்தனை ஆண்டுகளாகப் போராடிப் பெற்ற களைப்பையும் சோர்வையும் துன்பத்தையும் மறப்பதற்காகத்தான் நான் இப்போது உன் கரம் பற்றத் துடிக்கிறேன். நாட்டை மீட்பதற்காக நாம் வெளி உலகில் மட்டுமா போராடியிருக்கிறோம்? நமக்குள்ளே எத்தனை எத்தனை போராட்டங்கள் நடத்தித் துறவு வாழ்க்கை வாழ்ந்திருக்கிறோம். கயல்விழி! அரசனாக இருந்தாலும் நான் மனிதன்தானே கயல்விழி! வாழ்வதற்காகத்தானே நாம் போராடுகிறோம்? இதுவரையில் நான் ஏற்ற துன்பங்களை மறக்கச் செய்வதற்கும், இனி ஏற்கப் போகும் துன்பங்களை வெல்வதற்கும் நீ உன்னையே தந்துவிடு; நீ உன்னைத் தந்துவிடு, கயல்விழி! மறுக்காமல் தந்து விடு!''

அவன் துடித்தான், தவித்தான்; வரம் கேட்கும் பக்தனைப் போல் அவளிடம் முறையிட்டான். கயல்விழியின் உள்ளம் ஆயிரமாயிரம் சுக்கல்களாக உடைபட்டு நொறுங்குவதை அவனால் உணரமுடியவில்லை. பித்தனாகிவிட்டான்.

''அடுத்த போர் என்று கூறினீர்களே?'' என்று கேட்டாள் கயல்விழி.

''அடுத்த போர் மிக மிகப் பயங்கரமான போராக இருக்கும். அந்தப் போரின் முடிவில் ஒன்று பாண்டிய சாம்ராஜ்யம் நிலைத்து நிற்கும்; அல்லது கோசல சாம்ராஜ்யம் நிலைத்து நிற்கும். ஒன்று நம்முடைய மீனக் கொடி, வடக்கே கன்னட நாட்டுத் துவார சமுத்திரத்தில் பறக்கும்; அல்லது அவர்களது புலித் தலைக் கொடி மதுரையில் பறக்கும்.''

''கோசல சாம்ராஜ்யம் என்றால் காஞ்சியில் நாம் சந்தித்தோமே இளவரசி பாமினி, அவரது நாடுதானே?''

''ஆமாம்; அவள் தந்தை வீர நரசிம்மர் இப்போது நம்மீது போர் தொடுக்கத் துணிந்து விட்டார். சோழ ராஜ்யத்துப் போரை விடப் பயங்கரமான போராக அது இருக்கும்.''

''இளவரசே! இனி நமக்குப் போர் வேண்டாம்!'' என்று தன் இரு கரங்களையும் கூப்பிக் கொண்டு அவனிடம் முறையிட்டாள் கயல்விழி. ''இரண்டு பெரும் போர்களை இந்த வயதுக்குள் நான் கண்ணாரக் கண்டு விட்டேன். இதன் பயங்கரமான கொடுமைகளையும் அநுபவித்து விட்டேன். இப்போது நாம் நடத்திய போர் நம் சொந்த நாட்டின் உரிமையை மீட்பதற்காக நடத்திய போர். அடிமைத்தனத்தைச் சுட்டெரிப்பதற்காக நாம் போர் தொடுத்தோம். இனி நம் வாழ்நாள் முழுவதுமே நமக்குப் போர் வேண்டாம், இளவரசே! பாண்டிய நாட்டு ஆண்கள் அனைவரையும் களத்துக்குப் பலி கொடுத்து விட்டுப் பெண்களை அமங்கலிகளாக்கும் போர் இனி நமக்கு வேண்டாம்!'' என்று கதறினாள் கயல்விழி. (தொடரும்)

---

## நம்பிக்கையோடு தேர்ந்தெடுங்கள்



# இந்தியா சூப்பர்

மிகச் சிறந்த நவீன கார் டயர்

இந்தியா டயர் அண்ட் ரப்பர் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்..

M33/IT-3630A/TAM.

# கோயில் திருவிழா

அப்பொழுதுதான் அவர்களுக்குத் தங்களுடைய நிலைமை தெரிய வந்தது. திருவிழாக் கமிட்டியில் அவர்கள் ஆள் கிடையாது! புதிதாக நூல் நிலையம் திறந்த பொழுதும் அநேக நாட்களுக்கு முன்னும் கிராமத்து ஆசிரியர் ஒருவர் தூங்கிக் கொண்டிருந்த கூட்டுறவுச் சங்கத்தைப் புதுப்பித்தபொழுது அதிலும், என். எஸ். எஸ். லோக்கல் கமிட்டியிலும், எஸ். என். டி. பி. பிராஞ்சிலும் செறுமர் சபையிலும், சாலை அமைப்புக் கமிட்டியிலும் மற்றும் வாக்கு எடுக்கச் செய்து கொஞ்சம் பேர்களை உள்ளே புக வைக்க முடிந்திருந்தது. ஆனால் திருவிழாக் கமிட்டியில் அவர்கள் ஆள் யாருமே இல்லை! தலைவர்கள் அவர்கள் வந்திருந்த பொழுது பொதுச் சபைகள் அனைத்திலும் நுழைந்து அவைகளை வசப்படுத்த வேண்டும் என்று வகுப்பு நடத்திச் சொல்லிக் கொடுத்த பொழுதுதான் அந்த வட்டத்துத் தோழர்கள் தங்களுக்குக் கிடைக்கவிருந்த அரும் பெரும் வாய்ப்புக் கைநழுவிப் போய் விட்டதைத் தெரிந்து கொண்டார்கள். இந்தக் கஷ்டத்தை எப்படியாவது சரிக்கட்ட வேண்டும்.

அண்மையில் கூடின லோக்கல் கமிட்டியில் இந்த விஷயம் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. செயலாளரை இந்தத் தவற்றுக்காக அங்கத்தினர்கள் கடுமையாகத் தாக்கினார்கள். முன்னமேயே இது பற்றிச் சுற்றறிக்கை வேறு வந்திருந்தது. அது நடைமுறையில் கொண்டு வரப்படாமல் இருந்ததற்காகச் செயலாளர் மன்னிப்புக் கோரினார். கடைசியாக இந்தக் குறையைச் சரிக்கட்டுவதற்காக ஒரு வழியும் கண்டு பிடித்தார்கள். திருவிழாக் கமிட்டிக்கு மக்கள் பிரதிநிதித்துவம் இல்லை என்று பிரசாரம் செய்ய வேண்டும். திருவிழாவை முன்னிட்டுக்கூடும் கிராமத்தாரின் பொதுக் கூட்டங்களில் கம்யூனிஸ்ட் அனுதாபிகளின் வழியாகக் கட்சியின் வேலைத் திட்டங்களுக்குப் பெரும்பான்மை பெற வேண்டும். இதைத் தவிர அந்தக் குறையைச் சரிக்கட்ட வேறு வழியே இல்லை.

அந்தக் குக்கிராமத்தில் புதர்கள் மண்டிக்கிடந்த ஒரு திறந்தவெளி இருந்தது. வெகுகாலத்துக்கு முன் அங்கு ஒரு கோயில் இருந்தது. அது போன்ற கோயில்கள் கேரளத்தில் எல்லாக் கிராமங்களிலுமே காணக் கிடைக்கும். அதற்குக் கூரை இல்லை. கருங்கல்லால் ஆன குட்டிச் சுவர் மட்டும் உண்டு. அந்தச் சுவருக்குள் ஒரு நல்ல காடும் வளருகிறது. ஏறக்குறைய நூறு வயதான ஒரு பலா மரம் அதற்குள் உண்டு. நிச்சயமாக நூறு ஆண்டுகளுக்கு முன்னதாகவே அந்தக் கோயிலும் பாழடைந்திருக்க வேண்டும். அதை ஒரு காளி கோயில் என்று சொல்கிறார்கள்; இருக்கலாம். ஆனால் கோயில் விக்கிரகத்தைக் கண்டவர் யாருமே இல்லை. அங்குதான் ஜனங்கள் திருவிழாக் கொண்டாட இருக்கிறார்கள்.

மூலம்: தகழி சிவசங்கரப் பிள்ளை



திருவிழாக் கொண்டாடுவதற்காக ஒரு கமிட்டியைக் கூட ஏற்படுத்தியாகிவிட்டது.

இதுபோன்ற ஒரு தீர்மானம் நிறைவேறியதுகூட ஒருவருடைய முயற்சியினால் தான். நாலைந்து வருஷங்களுக்கு முன் காவி உடை உடுத்தி, தாடியும் சடையும் வளர விட்ட ஒரு சாமியார் ஒருவர் அந்த ஊருக்கு வந்தார். முதலில் யாருமே அவரை அடையாளம் கண்டுகொள்ள வில்லை. அவர் அந்தக் கிராமத்தில் வசித்தவர்தான். சில வருஷங்களுக்கு முன் அந்த ஊரை விட்டுப் போனவர். சிறு வயதில் ஊரை விட்டுப்போன தம்பியைக் காணத் தவம் கிடக்கும் ஒரு கிழத் தமக்கை அவருக்கு உண்டு. அந்தத் தமக்கை பிறகு அவரை எங்குமே போகவிடவில்லை. இப்பொழுது அவர் காவி உடைக்குப் பதில் வெள்ளைவேட்டியை உடுத்துகிறார். தாடியும் சடையும் வழித்துள்ளார். எது எப்படியிருந்தாலும் அவர் உண்மையில் ஒரு பக்தர். பாழடைந்த தாலும் அது ஒரு கோயிலல்லவா? அவர் இன்றும் அங்கு போய்த் தரிசிப்பார். அவர் கையில் எப்பொழுதும் ஒரு பாகவதம் இருக்கும். எந்த வீட்டிலாவது பஜனை இருந்தால் அவரைக் கூப்பிடுவார்கள். நல்ல நல்ல கீர்த்தனைகள் அவருக்குப் பாடத் தெரியும். அவர் பெயர் நாராயணப் பிள்ளை.

நாராயணப் பிள்ளைதான் இந்தத் திருவிழாக் கொண்டாட்டத்தின் மூலகர்த்தா. அவர் எல்லா வீடுகளிலும் ஏறி இறங்கித் தம் கருத்தைப் பிரசாரம் செய்தார். எல்லோருக்குமே அது மிகவும் பிடித்திருந்தது. வயதான கிழங்கட்டைகளின் சந்தோஷம் சொல்லி முடியாது. காரணம் என்ன தெரியுமோ? அந்தக் கோயில் உருப்படாமல், அந்த ஊர் உருப்படாது என்ற பரவலான ஒரு நம்பிக்கை அந்தக் கிராமத்தில் உண்டு. நாராயணப் பிள்ளையிடத்தில் இதற்கென ஒரு பெரிய திட்டமே உண்டு. முதலில் திருவிழாக் கொண்டாட்டம். பிறகு கோயில் ஜீர்ணோத்தாரணம். அதன் பிறகு பூஜை முதலிய காரியங்களுக்காக நிலபுலன்கள் சேர்க்க வேண்டும். இத்தனை விஷயங்கள் அவர் கற்பனையில் உண்டு.

நாராயணப்பிள்ளை வீடு வீடாகச் சென்று ஜனங்களைக் கூப்பிட்டு ஒரு பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தார். அந்தப் பொதுக் கூட்டம் ஒரு செயற் குழுவைத் தேர்ந்தெடுத்தது. பணம் சேர்க்கவும் ஆரம்பித்தார். திருவிழா சிறிது சிறப்பாகவே நடக்கும் போல் இருந்தது. இந்தக் கூட்டத்தில்தான் அந்த வட்டாரத் தோழர்கள் மேலே சொல்லியுள்ள தீர்மானத்தைச் செய்தார்கள்.

திருவிழாக் கமிட்டிக்குச் சரியான பிரதி நிதித்துவமில்லை என்ற பிரசாரம் சிறிது காரசாரமாகவே அந்தக் கிராமத்தில் நடந்தது. நாராயணப் பிள்ளை போன சில இடங்களிலிருந்தும் இக் கேள்விகள் கிளம்பின.

தமிழாக்கம்: கே. நாராயணன்



நாராயணப் பிள்ளை ஆற அமர யோசனை செய்தார். இந்தக் குற்றச்சாட்டுகளுக்கு என்ன பரிகாரம் செய்வது என்று அவருக்கு ஒன்றுமே பிடிபடவில்லை. ஒருநாள் எதிர்பாராத விதமாகக் கம்யூனிஸ்ட் கட்சி வட்டாரச் செயலாளரை நாராயணப் பிள்ளை சந்தித்தார். நாராயணப் பிள்ளை தம் சிக்கலை அவரிடம் சொன்னார்: ''பிரதிநிதித்துவமில்லாத ஒரு கமிட்டியை ஏற்படுத்தியது தவறுதான். ஆனால் அது உங்கள் தவறல்ல. உங்களுக்கு இது போன்ற பொதுக் காரியங்களில் அனுபவம் கிடையாது!'' என்றார் அவர்.

நாராயணப்பிள்ளை அதை ஒப்புக் கொண்டார். அவருக்கு அனுபவமில்லைதான். இந்த விதமான காரியங்கள் செய்தது கிடையாது.

''அதற்கு இப்போ என்ன வழி?'' என்று அவர் அந்தச் செயலாளரிடத்தில் கேட்டார்.

செயலாளர் யோசனை செய்து தம் அனுபவம் மிகுந்த அபிப்பிராயத்தைச் சொன்னார். ''வழியிருக்கு: கமிட்டி அப்படியே இருக்கட்டும். அதை ஒன்றும் செய்ய வேண்டாம். இனி மேல் எல்லாவற்றையும் பொதுக் கூட்டம் கூட்டி முடிவு செய்தால் போதும்.''

அதனுடைய நடைமுறையில் ஏற்படும் சங்கடங்களை நாராயணப்பிள்ளை வெளியிட்டார். ''தினமும் பொதுக் கூட்டம் கூட்ட முடியுமா, என்ன?''

செயலாளர் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. ''கூட்டித்தான் ஆகவேண்டும். செய்த பிழைக்கு இதுதான் பிராயச்சித்தம்.''

நாராயணப் பிள்ளையினாலும் இதை மறுக்க முடியவில்லை.

திருவிழாத் தினம் நெருங்கிக் கொண்டிருந்தது. ஆனால் அதற்காக வேண்டிய வேலைகளோ நிறைய இருந்தன. முதலில் இன்னும் சிறிது பணம் வசூலாக வேண்டும். திருவிழாவின் நிகழ்ச்சி நிரல் தயாராக வேண்டும். அதற்காக ஒரு பொதுக் கூட்டத்துக்கு நாராயணப்பிள்ளை அறிக்கை கொடுத்தார். திருவிழாவின் நிகழ்ச்சிகளை நிச்சயிப்பதற்காக, ஏன் பொதுக் கூட்டம் கூட்ட வேண்டும் என்று சில கமிட்டி அங்கத்தினர்கள் கேட்டார்கள். அவர்களுக்கு அது பிடிக்கவில்லை.

பொதுக் கூட்டத்துக்கான அறிக்கை வெளி வந்ததற்கு மறுநாளிலிருந்தே மும்முரமான பிரசாரம் அந்தக் கிராமத்தில் நடைபெற ஆரம்பித்தது. காலையிலிருந்து மூன்று, நான்கு பேர்கள் கொண்ட கோஷ்டிகள் வீடு வீடாக ஏறி இறங்க ஆரம்பித்தன. இரண்டு நாட்கள் சென்ற பிறகுதான் இந்தச் செய்தி வட்டாரக் காங்கிரஸ்காரர்களுக்குத் தெரிய வந்தது. மறுநாளிலிருந்து அவர்களும் வீடு வீடாகச் செல்ல ஆரம்பித்தனர். பொதுக் கூட்டத்தன்று காலையிலிருந்து பிரசாரம் அதன் உச்ச கட்டத்தை அடைந்தது.

தலைவர் அவர்கள் வரவில்லை. அவருக்கு இந்தப் புதுப் போக்குப் பிடிக்கவில்லையாம். பொதுக்கூட்டத்துக்கு நிறையப் பேர்கள் வந்திருந்தனர். இரண்டு கட்சிகளைச் சேர்ந்தவர்களும் தங்கள் ஆட்களைக் கட்டாயப்படுத்தி அழைத்து வந்திருந்தனர். நடக்க முடியாத படு கிழவர்கள்கூட வந்திருந்தனர். ஒரு தலைவர் தேவை. ஒருவர் மாதவன்பிள்ளை பெயரை எடுத்துரைத்தார். மற்றொருவர் அதை வழிமொழிந்தார். பெயரை எடுத்துரைத்தவரும் வழி மொழிந்தவரும் காங்கிரஸ்காரர்கள். கம்யூனிஸ்டுகள் கேசவன் என்பவருடைய பெயரை எடுத்துரைத்தனர். பிறகு தேர்தல் நடந்தது. கைதூக்கித்தான் தேர்தல். மாதவன் பிள்ளைக்குப் பெரும்பான்மை கிடைத்தது. என்ன காரணம் தெரியுமோ? கம்யூனிஸ்டுகள்தான் நிறையப் பேர்களைக் கொண்டு வந்திருந்தார்கள். இருந்தும் அவர்கள் அழைத்துக் கொண்டு வந்திருந்த நாயர் இனத்தவர்கள் மாதவன் பிள்ளைக்குக் கைதூக்கினர். அது போலவே காங்கிரஸ்காரர் கொண்டு வந்திருந்த ஈழவ இனத்தவர்கள் கேசவனுக்குக் கைதூக்கினர்.

மாதவன் பிள்ளையின் தலைமையில் கூட்டம் ஆரம்பமாயிற்று. திருவிழாவின் நிகழ்ச்சி நிரல் விவாதத்துக்கு முக்கியமாக எடுத்துக் கொள்ளப்பட்டது. முதலில் எந்த எந்த விஷயங்கள் வேண்டுமென்று தீர்மானம் செய்ய வேண்டும். யானை மீது அம்மன் பவனி. நாதசுரம், செண்டை மேளம், காலட்சேபம், திருவாதிரைக் களி, பாட்டுக் கச்சேரி, வாண வேடிக்கை இத்தனையும் வேண்டும் என்று யாரும் எதிர்க்காமலே நிச்சயித்தார்கள். அப்பாடா, நாராயணப் பிள்ளைக்குப் போன உயிர் திரும்பி வந்தது. அப்பொழுது கம்யூனிஸ்டுகளிடமிருந்து ஒரு பிரேரணை வந்தது.

''அம்மன் பவனிக்குப் பந்தளம் யானையைக் கொண்டு வரணும்னு என் அபிப்பிராயம்.'' ஒரு தோழர் எழுந்து தம்முடைய தீர்மானத்தைச் சபை முன் வைத்தார். அதை வேறு ஒரு தோழர் ஆமோதித்தார். உடனே ஒரு காங்கிரஸ்காரர் குதித்தெழுந்தார்.

''நான் அதை எதிர்க்கிறேன். மாப்பிள்ளைப் பிள்ளிதொம்மனுடைய யானைதான் பந்தளம் யானையைவிட அழகானது. அதனாலே தொம்மன் யானையைக் கொண்டாரணும்.''

இதைத் தொடர்ந்து கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது. தலைவர் தலையிட்டார். கம்யூனிஸ்ட் யானையும், காங்கிரஸ் யானையும் மோத ஆரம்பித்தன. கம்யூனிஸ்ட் யானை வென்றது. பந்தளம் யானைக்குப் பெரும்பான்மை வாக்குக் கிடைத்தது.

நாதசுர விஷயத்திலும் தர்க்கம் வந்தது. கம்யூனிஸ்ட் தோழர்கள் ஒரு நாதசுர வித்துவான் பெயரைப் பிரேரேபித்தார்கள். அந்த நாதசுர வித்துவான் அண்மையில் ஆலப்புழையில் வந்திருந்த கம்யூனிஸ்ட் தலைவரின் வரவேற்பின்போது இலவசமாக வாசித்தவர். அந்த விஷயம் காங்கிரஸ்காரர்களுக்கு ஞாபகம் வந்தது. அதற்கும் ஒரு மாதம் முன்னால் காங்கிரஸ் அக்கிராசனர் வரவேற்பின்போது அதே வித்துவான் இலவசமாக வாசித்ததை அவர்கள் மறந்தனர். எப்படியானாலும், அந்த இரண்டு விஷயங்களையும் அவர்கள் ஒருவருக்கொருவர் ஞாபகப் படுத்திக்கொண்

டனர்: ஒருவாறு நாதசுரக்காரரையும் தீர்மானித்தார்கள்.

காலட்சேபம் பெரும் தர்க்கத்துக்குரிய விஷயமாயிற்று. கம்யூனிஸ்ட் கூட்டங்களில் நடைபெறும் கலை நிகழ்ச்சிகளில் பங்கெடுக்கின்ற ஒரு பாடகி உண்டு. அந்த அம்மையார் மிகவும் வாக்குச் சாதுரியம் உடையவர். நல்ல பாடகியும் கூட. அவருடைய பெயர் எடுத்துரைக்கப்பட்டபோது காங்கிரஸ்காரர்கள் அதைக் கடுமையாக எதிர்த்தனர். அதற்குப் பதிலாக வேறொரு பெயரை எடுத்துரைத்தார்கள். அவர் காங்கிரஸ் பொதுக்கூட்டங்களில் கலந்து கொள்ளுகிறவர். ஒத்துப்போக வழியே இல்லை. 'கம்யூனிஸ்ட்காரர்களுக்குப் பெரும்பான்மை கிடைத்தால் கூட அப்படி ஒரு நிகழ்ச்சியை நடத்த விட மாட்டோம்' என்று காங்கிரஸ்காரர்கள் அடம் பிடித்தார்கள். ஏனென்றால், அந்த அம்மையார் தம் கதைகளில் வார்த்தைக்கு வார்த்தை காங்கிரஸ்காரர்களைத் திட்டுவதுண்டாம். கம்யூனிஸ்ட்காரர்கள் காங்கிரஸ் பாகவதரையும் இப்படியே குறை கூறினர். கூட்டத்தில் இருந்த ஓர் ஆசிரியர் ஒரு யோசனை தெரிவித்தார்: ''யாராக இருந்தாலும் புராணக் கதை சொல்லுவதாயிருந்தால் ஆட்சேபம் உண்டா?''

சண்டை தன் உச்ச கட்டத்தை அடைந்துள்ள அந்த நேரத்தில் இந்த யோசனை ஓர் ஆறுதலாக இருந்தது.

இந்த இரண்டு பேர்களில் கம்யூனிஸ்டு ஆதரவு பெற்ற அம்மையாருக்குத்தான் புராணக் கதை தெரியும். காங்கிரஸ்காரர்கள் மனமில்லாமல் அதை ஒப்புக் கொண்டார்கள். இருந்தும் அவர்களுக்கு உள்ளூற ஒரு பயம். புராணக் கதைகள் வழியாகக் கம்யூனிஸம் நுழைந்து வந்தால் என்ன செய்வது என்று? அப்போது ஒரு காங்கிரஸ்காரருக்கு யோசனை ஒன்று தோன்றிற்று. 'கதை என்னவென்று இப்பொழுதே முடிவு செய்யணும்' என்றார். அவ்வளவு தூரம் கம்யூனிஸ்ட்காரர்களின் யோசனை போயிருக்கவில்லை. காங்கிரஸ்காரர்கள் கொண்டு வந்த அந்தப் பிரேரணையில் ஏதோ சூது இருக்க வேண்டுமென்று அவர்களுக்குப் பட்டது. அந்தக் காங்கிரஸ்காரர் பக்த பிரகலாதன் கதையை வைக்கலாம் என்று யோசனை தெரிவித்தார்.

ஒரு கம்யூனிஸ்ட்காரர் பக்கத்திலிருந்த செயலாளரின் காதோடு காதாகக் கேட்டார்: ''இந்தப் பிரகலாதன் நம்ம கடவுளா, அல்லது காங்கிரஸ்காரர் கடவுளா?''

செயலாளர் அப்போது அந்தக் கதை வழியாகக் காங்கிரஸ் பிரசாரம் வருமா என்று யோசித்துக் கொண்டிருந்தார். பாடகி என்னவோ கம்யூனிஸ்ட்தான். ஆனாலும் கதைக்குக் காங்கிரஸுடன் தொடர்பு இருக்குமோ? அப்பொழுது இடது பக்கம் அமர்ந்திருந்த ஒரு தோழர் கேட்டார்:

''பக்த இராவணன் என்ற கதையை ஏன் வைக்கக் கூடாது?''

காங்கிரஸ்காரர்களுக்கும் சந்தேகம் உண்டாயிற்று. வோட்டுக்கு விட்டபோது கம்யூனிஸ்ட்காரர் வென்றார். பக்த இராவணன் கதையை வைப்பதென்று முடிவாயிற்று.

## மீண்டும் வருவேன்!



பையன்: அடுத்த வாரமும் வரேன். நிறையக் கடலே வைத்திரு. எனக்குப் போடறதுக்குத் தான், என்ன?

பாட்டுக் கச்சேரி விஷயத்திலேயும் சர்ச்சை தீவிரமாயிற்று. கம்யூனிஸ்ட் பாடகருக்கு இந்தக் காலத்துத் துக்கடாப் பாட்டுகள்தான் தெரியும். ஆனால் காங்கிரஸ் பாடகர் சங்கீதத்தை முறைப்படி பயின்றவர். அந்தப் போட்டியில் காங்கிரஸ் வென்றது.

இலக்கிய விவாத அரங்கு பற்றி ஒரு சமரசம் ஏற்பட்டது. இரண்டு கம்யூனிஸ்ட் புலவர்களும், இரண்டு காங்கிரஸ் புலவர்களும் பேச்சாளர்கள். இலக்கியம் என்னவென்றுகூடத் தெரியாத ஒரு வியாபாரி அவைத் தலைவர்.

இதற்குப் பிறகு அர்ச்சகர் யார் என்று விவாதம் வந்தது. கம்யூனிஸ்ட் கட்சியின் மாவட்டக் குழுச் செயலாளர் நம்பூதிரி ஒருவர் உள்ளார். அவருடைய தம்பியின் பெயரைக் கம்யூனிஸ்ட்காரர்கள் எடுத்துரைத்தார்கள். காங்கிரஸ்காரர்கள் காங்கிரஸ் மண்டலச் செயலாளரின் தம்பியின் பெயரையும் எடுத்துரைத்தார்கள். இதில் காங்கிரஸ் வென்றது.

இப்படியாக அந்தக் கூட்டம் முடிந்தது. எல்லோருக்கும் அட்வான்ஸ் கொடுக்கவும் அந்தக் கூட்டம் கட்டளையிட்டது.

கூட்டம் முடிந்து எல்லோருமே தங்கள் தங்கள் வீட்டுக்குப் போனார்கள். ஆனால் பணத்தைப் பற்றி யாருமே நிச்சயிக்கவில்லை. அந்தக் கோஷங்களுக்கு இடையில் பாவம்,

நாராயணப் பிள்ளை ஏதாவது சொல்லியிருந்தால்கூடக் காது கொடுத்துக் கேட்க யாரிருந்தார்கள்? பழைய கமிட்டியில் இருந்தவர்களில் ஒத்துழைக்காதவர்கள் அதிகம். அவர்கள் நாராயணப் பிள்ளை மீது குற்றம் சாட்டினார்கள். நிகழ்ச்சி நிரலின்படி எல்லாம் நடைபெற வேண்டும் என்றால் இன்னும் ஐந்நூறு ரூபாய் தேவைப்பட்டது.

பாவம் நாராயணப் பிள்ளைக்கு ஒரே அலைச்சல்.

நாள் நெருங்கிற்று. பணம் போதவில்லை. நாராயணப் பிள்ளை ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவர் போல் தெரிந்தது. அதிர் வேட்டுகள் முழங்க, சங்க நாதம் ஒலிக்க அந்த நாள் ஆரம்பமாயிற்று.

இலக்கிய விவாத அரங்கு மாலை மூன்று மணிக்கு நடைபெற விருந்தது. எல்லாச் சொற்பொழிவாளர்களும் வந்திருந்தார்கள். ரசிகர்கள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்திருந்தார்கள். கம்யூனிஸ்ட் சொற்பொழிவாளர் பேசினபொழுது காங்கிரஸ்காரர்கள் கூச்சல் போட்டார்கள். காங்கிரஸ் புலவரைக் கம்யூனிஸ்ட்காரர்களும் கூச்சல் போட்டு உட்கார வைத்தனர். எதிர்பார்த்ததற்கு முன்னதாகவே விவாத அரங்கு முடிவுற்றது.

கதாகாலட்சேபம் செய்யும் பாடலி நல்ல கெட்டிக்காரி. பேச்சு தண்ணீர் பட்ட பாடு. கதைக்கு வருவதற்கு முன்னால் இன்றைய சமூகத்தின் அநீதிகளையும் தொழிற்சங்க பலத்தையும் பற்றி ஒரு சிறு சொற்பொழிவாற்றினாள். இரண்டு பாட்டுப் பாடினாள்: கம்யூனிஸ்ட் கட்சிதான் மக்களின் நன்மைக்குகந்த கட்சி என்று சொல்ல ஆரம்பித்ததும் ஓராயிரம் பூனைகள் சேர்ந்து கத்த ஆரம்பித்தன. புத்திசாலியான பாடலி உடனே காத்திரியைப் பிடித்துக் கொண்டாள். ரசிகர்கள் அமைதியானார்கள்.

நிகழ்ச்சி நிரலில் பங்கு கொள்ளும் அனைவருமே வந்துவிட்டார்கள். 'தாலப்பொலி' உற்சவத்துக்கு நூற்றைம்பது பெண்கள் தயாராக நின்றார்கள். அவர்களில் சில பெண்கள் சிவப்புத் தாவணியை அணிந்திருந்தார்கள். மற்றவர்கள் மூவர்ணத் தாவணியை அணிந்திருந்தனர்.

நாராயணப் பிள்ளை எல்லாவற்றையும் மேற்பார்வையிட்டு, அங்கிங்கெனாதபடி எங்கும் இருந்தார். எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஆட்கள் வந்ததால் அவருக்குப் பரம திருப்தி. நாராயணப் பிள்ளைக்கு உதவி ஆள் ஒருவரை ஏற்பாடு செய்திருந்தார்கள்.

கதா காலட்சேபம் ஒழுங்காக நடந்தது. அது முடியும் தறுவாயில் இருந்தது. ரொம்ப அவசரமாக நாராயணப் பிள்ளை அலுவலகத்தில் சென்று தமது உதவியாளரிடத்தில் சொன்னார். ''நான் வீட்டுக்கு அவசரமாகப் போய் ஒரே நிமிஷத்திலே வர்றேன். போறதும் வர்றதும் யாருக்கும் தெரிய வேணும்.''

வேண்டிய செலவுகள் ஏதாவது செய்யப் பணம் தேவைப்படும்போது எடுத்துக்கொள்வதற்காகப் பணப் பெட்டிச் சாவியையும் அவரிடம் கொடுத்தார்.

கதா காலட்சேபம் முடிந்தது. பாட்டுக் கச்சேரி ஆரம்பமாயிற்று.

கதாகாலட்சேபம் செய்த அம்மை அலுவலகத்துக்கு வந்தாள். ''அட்வான்ஸ் போக மீதிப் பணம் தேவை. இன்றிரவே நான் ஊருக்குப் போகணும்.''

உதவியாளர் சொன்னார்: ''பொறுப்பாளர் இப்போ வருவாரு.''

கதாகாலட்சேபம் செய்தவள் நாராயணப் பிள்ளைக்காகக் காத்திருந்தாள். பாட்டுக் கச்சேரி ஜோராக இருந்தது. அந்த அம்மாள் சிறிது நேரம் அதைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

இன்னமும் நாராயணப் பிள்ளை வந்து சேரவில்லை. பாட்டுக் கச்சேரி முடிந்தது.

பாடலிக்கோ அவசரம். பாட்டுக் கச்சேரி செய்த பாகவதரும் அலுவலகத்துக்கு வந்துவிட்டார். ஆனால் பொறுப்பாளரைத்தான் காணோம்.

இருந்தாலும் அரசியல் கட்சிகளில் போட்டா போட்டி மிகுந்த அந்தத் 'தாலப்பொலி' உற்சவம் மிக ஜோராகத்தான் இருந்தது.

பாடலிக்கும் பாகவதருக்கும் போக என்னவோ அவசரம்தான்: ஆனாலும் அவர்களுக்கு வாண வேடிக்கை காண ஆசை.

'தாலப்பொலி' முடிந்து வாண வேடிக்கை ஆரம்பம். ஒரு வாணத்தில் ஒரு நாயை வைத்து ஆகாயத்துக்கு அனுப்பப்பட்டது. அந்த நாய்க்குட்டி ஒரு 'குடை' உதவியுடன் அபாயமில்லாமல் கீழே இறங்கிற்று. நல்ல காட்சி.

வாண வேடிக்கை முடிந்தபோது பொழுது விடிந்தது. நாராயணப் பிள்ளை இன்னும் திரும்பவில்லை. எட்டு மணியாயிற்று. அந்தத் திறந்தவெளியில் பாடலியையும் பாகவதரையும் தவிர வேறு யாரும் இல்லை.

நாராயணப் பிள்ளை எங்கே? யாருக்குத் தெரியும்? பாடலிக்கும், பாகவதருக்கும் திரும்பிப் போகக் கையில் பணமில்லை. அந்தத் திறந்த வெளியில் அழைப்பு அனுப்பி வரவழைக்கப்பட்ட பாடலியும், பாகவதரும் நிற்பதைக் கண்டு ஊராரில் சிலர் அவர்கள் மேல் இரக்கம் கொண்டு எப்படியோ வீட்டுக்கு அனுப்பினார்கள்.

நாராயணப் பிள்ளை வரவு செலவுக்குச் சரியான உண்மைக் கணக்கு எழுதி வைத்திருந்தார். பிறகுதான் அவர் அந்த ஊரை விட்டுப் போனார். போகாமல் வேறு வழி? நாராயணப் பிள்ளையின் வயதான சகோதரி தலையில் அடித்துக்கொண்டு அழுகின்றாள். ''நான் சாகக் கிடக்கும்போது என் கூடப் பிறந்தவன் பக்கத்தில் இருப்பான்னு நினைச்சுச் சந்தோஷப்பட்டேன். படுபாவிங்க என் செல்வத்தை விரட்டிட்டாங்களே.''

பிறகு நாராயணப் பிள்ளை திரும்பவே இல்லை. அடுத்த ஆண்டு உற்சவத்துக்குத் தங்கள் கை மேலோங்கி நிற்பதற்காகக் கம்யூனிஸ்டுக்காரர்களுக்கும் காங்கிரஸ்காரர்களுக்கும் இப்பொழுதிலிருந்தே போட்டி.

''உலகத்தில் மிக அதிக மதிப்புள்ளது உண்மையாகும். ஆகையால் அதை உபயோகிக்கும் விஷயத்தில் சிக்கனமாயிருக்க வேண்டும்!''

— மார்க் ட்வெயின்



ஃ ஃ ஃ

'''ஆங்கிலம் இன்னும் முப்பது வருஷ காலமும் அதற்குப் பின்னரும்கூட நீடித்திருக்கும்' என்று பிரதமர் சாஸ்திரி திருவனந்தபுரம் வக்கீல்கள் சங்கத் தூதுகோஷ்டியினரிடம் தெரிவித்தார்.''

— பத்திரிகைச் செய்தி, 30–1–65

'முப்பது வருஷ காலமும் அதற்குப் பின்னரும் ஆங்கிலம் நீடித்திருக்கும் என்று நான் கூறவே இல்லை' என்று பிரதமர் சாஸ்திரி மறுக்கிறார்.

— பத்திரிகைச் செய்தி, 3–2–65

''ஆங்கிலம், முப்பது அல்லது முப்பத்தைந்து வருஷ காலமே நீடித்திருக்கும் என்று பிரதமர் சாஸ்திரி எங்களுக்கு வாக்குறுதி அளித்தார்'' என்று திருவனந்தபுரம் வக்கீல்கள் சங்கத் தூதுகோஷ்டியினர் திரும்பக் கூறி, தங்கள் கையெழுத்திட்ட ஓர் அறிக்கையை விடுத்திருக்கின்றனர்.

— பத்திரிகைச் செய்தி, 5–2–65

இதில் மார்க் ட்வெயினது 'புத்திமதி'யை அனுசரித்து யார் உண்மையைச் சிக்கனமாகக் கையாண்டிருக்கிறார்கள் என்று கண்டு பிடிக்க முடியவில்லை.

ஆனால் பிரதமர் சாஸ்திரி விக்கிரமாதித்தன் கதையொன்றில் வரும் விவசாயியைப் போல்தான் வேடிக்கையாக நடந்து கொள்கிறார். அந்த விவசாயி தம் வயல்கள் பக்கம் வந்த போஜ ராஜனது பரிவாரங்கள் பட்டினியாயிருப்பதைக் கண்டதும், தன் சோளக் கொல்லைக்குள் புகுந்து வேண்டியதைப் பறித்துத் தின்னச் சொல்கிறார். பிறகு தாம் காவல் காக்க உபயோகிக்கும் பரண் மீது ஏறிக்கொண்டதும், 'ஐயோ' என் வயல்களை நாசம் செய்கின்றனரே! கேள்வி முறையில்லையா?'' என்று அலறினார். விஷயம் என்னவென்று பார்த்தபோது பரண் கீழ் விக்கிரமாதித்தன் ஏறிய சிங்காதனம் இருக்கிறதென்றும், அதைக் காக்கும் வேதாளம் அவரை அப்படிப் பேசச் சொல்கிறதென்றும் தெரியவந்தது.



ஹிந்தி எதிர்ப்பு மும்முரமாகி, துப்பாக்கிப் பிரயோகங்களில் வந்து முடிந்த செய்திகளைக் கேட்டதும், ''ஹிந்தியை ஹிந்தி அல்லாத மக்களின் மீது திணிக்க மாட்டோம்'' என்கிறார். பிறகு அடுத்த நாளே, ''ஹிந்திதான் தேசிய பாஷை. அதைப் பரப்பாமல் என்னசெய்வது?'' என்கிறார். மறுபடியும் ஹிந்தியை ஆட்சேபித்து இரண்டு வாலிபர்கள் தீக்குளித்தார்கள் என்ற செய்தி வெளியானதும், ''ஹிந்தி தாய்மொழியல்லாத பிரதேசத்தினரைப் பாதிக்கும்படி அதை உபயோகிக்க மாட்டோம்!'' என்கிறார். மறுநாள் ''அரசியல் அமைப்பில் ஹிந்திதான் தேசியபாஷை என்று கூறியிருக்கிறது'' என்கிறார்.

சாஸ்திரியை ஹிந்தி வேதாளம்தான் முன்னுக்குப் பின் முரணாகப் பேசச் சொல்கிறது.

ஃ ஃ ஃ



சென்ற வாரம் மாப்பிள்ளைகளின் விஷயம் டெல்லியில் நடைபெற்ற தொழில் கல்வியின் அகில இந்திய சங்கத்தில் பெரிதும் அடிபட்டது.

ஜப்பானில் தொழிலதிபர்கள், தகுதியுள்ள வாலிபர்களைப் பொறுக்கி எடுத்துத் தொழிற் பயிற்சி அளிப்பார்களாம். பிறகு தொழிலதிபர்கள் யாராவது அவர்களுக்குத் தங்கள் பெண்ணை மணஞ் செய்விப்பார்களாம். சங்க அங்கத்தினர் திரு லாக்மல் கோஷ் இந்தத் தகவலைத் தெரிவித்தார்.

பேராசிரியர் பார்க்கின்ஸன் எழுதியுள்ள, 'இன்லாஸ் அண்டு ஔட்லாஸ்' என்ற புத்தகத்தைப் படித்தால் பிரிட்டனிலும் இப்படித்தான் நடக்கும் என்று எண்ணத் தோன்றுகிறது. ஏனென்றால் அவர் ஒரு பெரிய முதலாளிக்கு மாப்பிள்ளையாகி விடுவதைப்பற்றிப் புத்தகம் முழுதும் சொல்கிறார்.

''வாலிபனே! கல்யாணம் செய்து கொள்வதற்காகப் பெண்ணைப் பார்க்க வேண்டும் என்று அசட்டுத்தனமாக எண்ணிக்கொண்டிராதே. பெண்ணிருக்கும் பக்கம் திரும்பியும் பாராதே. அவள் எத்தனைக்கெத்தனை விகாரமாயிருக்கிறாளோ அத்தனைக்கத்தனை நல்லதே. உன் மாமனார் எத்தனை தொழில் ஸ்தாபனங்களில்



மானேஜிங் டைரக்டராக இருக்கிறார் என்பதை மட்டும் கவனித்துக்கொள்.''

* * *

பங்களூர் செகரடேரியட் காரியாலயத்தில் ஓர் அரசாங்கக் காரியதரிசியின் அறையின் பக்கம் டவாலி தரித்த ஒரு சேவகர் போய்க் கொண்டிருந்தார். அவர் கையில் ஒரு புடவை இருந்தது. அது ஈரப் புடவை. அதிலிருந்து தண்ணீர் கூடச் சொட்டிக்கொண்டிருந்தது. இதைக் கண்டு குமாஸ்தாக்கள் ஆச்சரியப்பட்டனர்.

இப்படிக் காரியாலயத்துக்கு மனைவியின் புடவையை எடுத்துக் கொண்டு வருகிறாரே. இவருக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டுமென்று நினைத்தனர்.

அந்தச் சேவகர் காரியதரிசியினிடம் சென்று புடவையைக் காண்பித்தார். ''வீட்டில் அம்மா இதை என்னைத் தோய்க்கச் சொன்னாங்க! என் வேலை இதுதானா?'' என்று கேட்டார்.

சில வருடங்களுக்கு முன்னர் நடந்த 'உண்மைச் சம்பவம்' இது. அதிலிருந்து மைசூர் ராஜ்ய அரசாங்க ஊழியர்களின் கற்பனைத் திறனில் மதிப்பு ஏற்பட்டுவிட்டது. அந்த மதிப்பு உயரும்படியான விதத்தில் இப்போது நடந்து கொண்டிருக்கிறார்கள்.

இந்த வருடம் அரசாங்கம் அவர்களுக்கு ஐந்து ரூபாய் விதம் ரூ 400 வரை சம்பளம் வாங்குபவர்களுக்குக் கிராக்கிப்படி அளித்தது. அத்துடன் இரண்டு ரூபாய் முதல் மூன்று ரூபாய்வரை வாடகை 'அலவன்ஸ'ும் கொடுத்தார்கள். இது மிகவும் குறைவென்று ஊழியர்கள் ஆட்சேபித்தும் பயனில்லை: மற்ற ராஜ்ய ஊழியர்களாயிருந்தால் சம்பளத்தை வாங்க மறுத்திருப்பார்கள். இவர்கள் அப்படிச் செய்யவில்லை. சம்பளத்தை வாங்கிக் கொண்டார்கள். கிராக்கிப்படித் தொகையை மட்டும் ராஜ்ய முதன் மந்திரிக்குத் திரும்ப மணி ஆர்டர் மூலமாக அனுப்பிக் கொண்டு வருகிறார்கள்.

அரசாங்க ஊழியர்கள் கெட்டிக்காரர்கள் கூட. முன் ஜாக்கிரதையாகப் பணத்தை. ''முதன் மந்திரி'' என்று விலாசமிட்டு அனுப்பி வருகிறார்கள். ஸ்ரீ நிஜலிங்கப்பா என்று பெயருக்கு அனுப்ப வில்லை. அப்படி அனுப்பினால் அது நிஜலிங்கப்பாவுக்கே சேர்ந்து விடுமோ என்று பயம் போலும்.

இதில் மேலும் ஆச்சரியப்படக் கூடிய விஷயம் ஒன்று உண்டு. சாதாரணமாக ஸ்திரீகள் கையில் பணம் போய் விட்டால் அது திரும்ப வெளி வருவது அபூர்வம். அதை வெளியிடச் செய்யும் மனப்பான்மை அவர்களுக்குக் கிடையாது. ஆனால் இப்படிப் பணத்தைத் திரும்ப அனுப்பச் செய்து வருபவர் ஸ்ரீமதி மேரி தவனுப் அவர்கள். மைசூர் ராஜ்ய கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்கள் சங்கத்தின் தலைவி.




* * *

பெயருக்கேற்பவே எல்லாம் அமைந்துள்ள பத்திரிகை யொன்று அமெரிக்காவில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. 'லைஸ்ட் கமிங்' என்ற பெயருள்ள இந்தப் பத்திரிகை ஒரு யுவர்கள் பத்திரிகை. இதன் ஆசிரியரான எட்வர்ட் ராணுவ விமானப் படையைச் சேர்ந்தவர். வயது 22. பத்திரிகையின் உதவி ஆசிரியர், மானேஜர் முதலியவர்களின் சராசரி வயது 23. இதில் பழுத்த வயதானவர் அதன் பிரசுரகர்த்தர் ஜாக் ரென்னர்ட். அவரது வயது 24.

பாப்பா பத்திரிகை என்று வெளிவருகின்றனவே, அவற்றில் பாப்பாக்கள் ஆசிரியப் பதவி வகித்தால் எப்படியிருக்கும்?

* * *

டிஸம்பர் மாதத்தில் கலை நிகழ்ச்சிகள் கலாட்டா வாரத்தில் ஒரு நாள் கலாக்ஷேத்திராவின் 'கீத கோவிந்தம்' நாட்டிய நாடகத்தைப் பார்த்தேன். சில விமர்சகர்கள் கூறுவது போல் அது கலாக்ஷேத்ராவின் நூற்றுக்கு நூறு தனிப்பட்ட பாணியில் அமைந்திருந்தது. அஷ்டபதியின் இனிமையான கவிதைகளின் சங்கீத மணம் வீசிக்கொண்டு நடனம் முழுவதும் உயர்தர வேதாந்தக் காதல் நிலை சூழ்ந்துகொண்டிருந்தது.

மறுநாள் தற்செயலாக ஓர் ஆங்கில தினசரிப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தபோது 'கீத கோவிந்தம்' என்று ஆங்கில வார்த்தைகளுள்ள ஒரு புத்தக விளம்பரம் கண்ணில் படவே அதைப் படித்துப் பார்த்தேன். **Love affairs of Lord Krishna (Gita Govindam.)** என்ற விளம்பரத் தலைப்பு மனத்துக்கு வேதனையை அளித்தது.

'கீத கோவிந்தத்'தின் பக்த ஆசிரியர் ஜயதேவரைப் பற்றி அத்தைப் பாட்டிக் கதை ஒன்று உண்டு. அவர் கடவுள் பக்தியினீடுபட்டு உலகத்தை மறந்து, தம்மை மறந்து ஆடை எதுவுமின்றித் திரிந்து கொண்டிருப்பாராம். அவரை வேடிக்கை பார்க்கும் ஜனங்கள் 'அம்மணத் தோண்டி' என்று கூச்சலிடுவார்கள். ஜயதேவர் அவர்களுடைய தொந்தரவு பொறுக்காமல் தமக்கு அகப்பட்ட ஒரு பாவாடையை எடுத்துக் கட்டிக் கொண்டு போனார். அப்போது ஜனங்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு 'பாவாடைத் தோண்டி.' என்று கூச்சலிடுவார்கள். நல்லவேளை! புத்தக விளம்பரம் செய்தவர்கள், அல்லது அந்தப் புத்தகத்தின் ஆங்கில ஆசிரியர் ''நிர்வாண பக்தரின் காதல் பாடல்கள்'' என்று குறிப்பிடாதிருந்தார்களே!




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி, அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி பியூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்.




K.6

**COUPON**

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

Name ______________________

Address ______________________

______________________

# படித்துப் பாருங்கள்

**வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு •**

**சத்திய வேட்கை •**

நம் பாரத நாட்டில் தொன்று தொட்டு எத்தனையோ மகான்கள் தோன்றித் தங்கள் புகழுடம்பை விடுத்துச் சென்றிருக்கின்றனர். அவர்களுள் அருட்பிரகாச வள்ளலார் என்னும் சிறப்புப் பெயர் பெற்றுச் சின்மயானந்த சொரூபமாக விளங்கிய சுவாமி ராமலிங்கப் பெருமான் தமிழகத்தில் தோன்றியவர்; பேசுந் தெய்வமாகப் போற்றப் பட்டவர். முற்றும் துறந்த முனிவராகவும், இறையருள் பெற்ற ஞானியாகவும், எல்லாம் வல்ல சித்தராகவும், மனிதாபிமானம் மிக்க மகாபுருஷராகவும் விளங்கிய அருட்பிரகாச வள்ளலார் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர்.

அம்பலத்தில் ஆடும் ஆனந்த தாண்டவ மூர்த்தியை அருட்பெருஞ்சோதியாகக் கண்டவர் அடிகள். அங்ஙனம் அரிதிற் கிடைத்த ஞான ஒளியை இறைவனின் தனிப் பெருங்கருணையாக மதித்து ஞான வாழ்வு வாழ்ந்தவர். பிள்ளைப் பிராயத்திலேயே இறை வழிபாட்டில் ஒரு புது வழியை, தனி வழியைத் தமக்கென ஏற்படுத்திக் கொண்டவர். உள்ளமே கோயில் எனக் கொண்டு கள்ளமற்ற சிந்தையில் கந்தப் பெருமானைக் கண்டு பிறகு அவ்வுருவத்தைக் கண்ணாடியிலும் கண்டு அதிலேயே சிந்தையை நிலைநிறுத்தி, தியான சமாதியில் ஈடுபட்டவர்.

1823ம் ஆண்டு சுவாமி ராமலிங்கப் பெருமான் அவதரித்த புனித தினம்தான் சமரச சுத்த சன்மார்க்க இயக்கம் தோன்றிய நன்னாளாகும். அடிகளுக்குப் பிள்ளைப் பிராயத்திலே பள்ளிப் படிப்பு அதிகம் பெற முடியாத நிலைமை ஏற்பட்டது. ஆனால் ஓதாது உணரும் பேறு பெற்ற இராமலிங்க அடிகள் இறைவனின் திருவருளினால் சகல கலை ஞானமும் கைவரப் பெற்று இளம் வயதிலேயே பூரண ஞானியாக விளங்கினார். அமிழ்தினும் இனிய தமிழ் மொழியில் ஆயிரம் ஆயிரம் கவிதைகள் இயற்றிச் சமரச சுத்த சன்மார்க்க நெறிக்கு அடிகோலினார். அடிகளின் ''திருவருட்பா'' தமிழ் கூறும் நல்லுலகமெல்லாம் பரவித் தனிப் பெருமை பெற்றது.

ஒருவர் விருந்து உண்பதும், இன்னும் பலர் வீடுதோறும் இரந்து உண்பதும் அடிகளின் மனத்தில் தாங்கொணாத வேதனையை உண்டுபண்ணியது. அதன் காரணமாக வடலூரில் ''சத்திய தருமச் சாலை''யை நிறுவி, இங்ஙனம் வந்தவர்களுக்கெல்லாம் உணவு வழங்க ஏற்பாடு செய்தார். அடிகளின் அரிய நூலான அருட்பாவுக்கு எதிர்ப்புக் கிளம்பி, 'அது அருட்பா அல்ல, மருட்பா' என்று மறுத்து உரைக்கப்பட்டது. அது நீதிமன்றம் வரையில் சென்றது. மறுப்புக்களும் கண்டனங்களும் இருதரப்பிலும், ஏராளமாக வெளியாயின. கடைசியில், அது திருஅருட்பாவுக்கும், அடிகளாருக்கும் பெரு மதிப்பையே தந்தது.

வள்ளலாரிடம் பேரன்பும், பெருமதிப்பும் கொண்ட திரு ம. பொ. சிவஞானம் அவர்கள் தமது ''செங்கோல்'' வாரப் பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளியிட்டு வந்த கட்டுரைகளின் தொகுப்புதான் இந்நூல்; நல்லதோர் ஆராய்ச்சி நூல். வள்ளலாரின் வாழ்க்கை வரலாறு இத்தனை விவரமாக யாராலும் எழுதப்படவில்லை. அருட்பாக் கவிதைகளை விமரிசனக் கண் கொண்டு திறனாய்வு செய்திருப்பது பாராட்டுக்குரியது. அடிகளாரின் பாடல்கள் பலவற்றை அவரது வாழ்க்கை வரலாற்றுக்கு ஆதாரமாகக் காட்டியிருப்பது நல்ல முயற்சி. அடிகளார் எய்திய மரணமிலாப் பெருவாழ்வு பற்றிப் பல சான்றுரைகளோடு திரு ம. பொ. சி. அவர்கள் விளக்கியிருக்கிறார். வள்ளலாரிடம் அன்புடையவர்களெல்லாம் அவசியம் ஊன்றிப் படிக்க வேண்டிய பகுதி அது.

469 பக்கங்கள் கொண்ட இந்த நூல வள்ளலாரின் வரலாற்று நூல் மாத்திரம் அல்ல; அவரது உள்ளப் பாங்கு, கொள்கைகள், சேவை எல்லாவற்றையும் பற்றிய சிறந்த ஆராய்ச்சி நூல். நல்ல நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

பிரசுரம்: இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை – 4; விலை: ரூ. 3.00.

பாரத தேசத்தின் பரம பிதாவும், அரும் பெருந்தலைவருமான மகாத்மா காந்தியடிகளின் வாழ்க்கை நமக்கு வழிகாட்டி; அவர் வாக்கு நமக்கு உபதேசம். நாட்டின் விடுதலைக்கு அரை நூற்றாண்டுக்கு மேல் அயராது உழைத்த உத்தம புருஷர் அவர். அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த பல சம்பவங்கள் மிகவும் சுவையானவை. அவருடைய தியாக புத்தியையும், சத்திய வேட்கையையும், மேற்படி சம்பவங்களில் நன்கு காண முடிகிறது.

பெற்றோர், பக்தி, தெய்வ பக்தி, தன்னம்பிக்கை, இரக்கம், துணிவு, அடக்கம் முதலிய அரிய குணாதிசயங்கள் காந்தி மகானிடம் எவ்விதம் குடிகொண்டிருந்தன என்பதற்கு அவர் வாழ்க்கையிலேயே தக்க சான்றுகள் கிடைக்கின்றன.

நம் நாட்டுச் சிறுவர் சிறுமியர் படிக்க வேண்டிய இன்றியமையாத நூல் இது. எளிய நடையில், அநாவசியமாக வளர்த்தாமல் எழுதப்பட்டிருக்கிறது. காந்தியடிகளின் வாழ்விலிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டியவைகளையெல்லாம் சுருக்கமாகத் தொகுத்தளித்திருப்பது பாராட்டத்தக்கது.

காந்திஜியை அறியாதவர் நம் நாட்டில் யாருமே இருக்க மாட்டார்கள். ஆனால் அவர் வாழ்க்கையில் நேர்ந்த பல அரிய சம்பவங்களை எல்லாரும் அறிந்திருப்பார்கள் என்று சொல்ல முடியாது. இந்நூலின் ஒவ்வொரு பகுதியும் கற்கண்டாக இனிக்கிறது. இந்நூலுக்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசு கிடைத்திருப்பது 'பொன் மலர்' நாற்றமுடைத்து என்பது போலாகும்.

தொகுத்தவர்: மீ. வி. சபரிராஜன். புத்தக நிலையம், 150, ஷெனாய்நகர், சென்னை–30; விலை: குறிப்பிடவில்லை.


ஆமாம்! நான் அவரை ஏமாற்றித் திருட அவர் திட்டக் கொடுத்தேன். அதற்காகப் போலீஸார் என்னைத் தேடுகிறார்கள். நான் இங்கு வந்து ஒளிந்து கொண்டேன். அத்தை அகப்பட்டுக் கொண்டாள். ஏன், டாக்டர் அப்படித்தானே?


நான் அத்தை வீட்டில் கண்டதும் காதல் கொண்ட தேவகியே வா! உனக்குச் சீக்கிரத்தில் இரட்டைக் குழந்தைகள் பிறக்கப் போகிறதே! அத்தை காலில் விழு. ஆசீர்வதிக்கச் சொல்!
இரட்டைக் குழந்தை யாருக்கு? இன்னும் கல்யாணமாகவில்லையே!


தேவகி! நாமிருவரும் தெய்வ சாட்சியாகப் புளியமரத்தடியில் மாலை மாற்றிக்கொண்டு திருமணம் செய்துகொண்டதை மறந்துவிட்டாயா?
சுத்த அபாண்டம்!
இவனுக்கு நிஜமாகவே பைத்தியம் பிடித்து விட்டிருக்கிறது.


ராஜா! பொறுத்துக் கொள். நான் உனக்குச் சிகிச்சை செய்யும்வரை நீ யாருடனும் பேசக்கூடாது.
ராஜாவின் அத்தையாம்! ஓர் அம்மாள் வந்து காத்துக் கொண்டிருக்கிறாள்.

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம் அடையுங்கள்
— ரண சிகிச்சையையும்
தடுங்கள்

பொறுக்க முடியாத வலியா! தாங்க முடியாத அரிப்பா? எரிச்சலெடுக்கும் உணர்ச்சியா? ரத்தக் கசிவா? உடனடியாக சிகிச்சை செய்யத் தாமதியாதீர்கள்! அலட்சியம் செய்தால், நோய் முற்றி ரணசிகிச்சை செய்ய வேண்டிவரும். 108 தேசங்களிலுள்ள டாக்டர்களால் சிபாரிசு செய்யப்பட்ட, நம்பிக்கையான ஜெர்மன் மூலநோய் களிம்பு ஹெடன்ஸா உபயோகித்து இப்பொழுதே நிவாரணம் பெறுங்கள்! ஹெடன்ஸா வலியையும் அரிப்பையும் சீக்கிரம் நிறுத்தி, மலப் பிரவிருத்தியைச் சுலபமாக கஷ்டமில்லாமல் செய்கிறது. முக்கியமாக, ஹெடன்ஸாவிலுள்ள சக்திவாய்ந்த மருந்துப் பொருள்கள் நீடித்த நிவாரணமளிப்பதோடு, வெடிப்புகளைச் சுருங்கச் செய்து, ஆரோக்கியமான தசைகளை வளர்க்கிறது. மூலநோய்க்குக் காலாகாலத்தில் ஹெடன்ஸா உபயோகித்தால் பிற்காலத்தில் ரணசிகிச்சை செய்யவேண்டிய நிலை ஏற்படாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

ஹெடன்ஸாவில் உணர்வழிக்கும் மருந்துகள் ஒன்றும் கிடையாது.

ஒரிஜினல் ஜெர்மன் முறைப்படி
இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

## தி டாலர் கம்பெனி

337, தம்பு செட்டி தெரு
சென்னை-1

பிரபல மருந்து வியாபாரிகளிடம்
கிடைக்கும்.



DJ-DOH-7 A TM



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்.

பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேதனையைக் குறைக்கவும், தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத் திற்கும் காரணமான கிருமிகளைக் கொல்ல உதவியளிப்பதற்கான வேலையைச் செய்வதை உணருங்கள். உடனடி நிவாரணமளிக்கவும் கிருமிகளை அகற்றவும் பெப்ஸ் உதவிபுரிகிறது




பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. ஐ. புல்போர்ட (இந்தியா) பிரைவேட் லிட்

PPY-55-TAM

சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ் மோதி அண்டு கம்பெனி, சென்னை-1
தபால் பெட்டி 1903

ஊர் பழைமையானது. ஊரில் வசிக்கும் அந்த ரெண்டு கிழவிகளும் பழைமையிலும் பழைமையானவர்கள். ஊரிலிருக்கும் கோவில் பழசுதான். கடவுள்? பழைமையானவர் என்றோ புதுமையானவர் என்றோ வரையறுத்துச் சொல்ல முடியாது. பழைமையான கோயிலுக்குள் புதுமையான நைலான் (ஜரிகை போட்டது) பாவாடை அணிந்து பழைமைக்குச் சான்றாகப் புதுமைக்கு வழிகாட்டியாக அம்பிகை காட்சி தந்து கொண்டிருந்தாள்.

ஊரில் மேற்கிலிருந்து கிழக்கே ஓடும் ஆறும் பழசுதான். அதன் அணைக்கட்டும், பாலமும் புதுசு. பழைய ஆற்றங்கரையில் இருந்த அமைதி, எளிமை மறைந்து போய்ப் புதிய பாலத்தின் மீது அடிக்கடி டிரான்ஸிஸ்டரின் ஒலியும் 'நடையா இது நடையா' என்று நம் இளவல்கள் இளம் பெண்களைப் பார்த்துப் பாடுவதும் முற்றிலும் புதுமை என்றுதான் ஒப்புக்கொள்ள வேண்டும்.

# வருவான் கண்ணன்

ஸரோஜா ராமமூர்த்தி



அந்த இரண்டு கிழவிகள் மட்டும் காலத்தால் ஏற்பட்ட மாறுதல்களில் அடித்துக்கொண்டு போகாமல், அன்றுபோல் இன்றுவரை அள்ளிச் சொருகிய முடிச்சும், தொங்கும் கம்மல்களும், காலணாக் குங்குமமும், மஞ்சள் பூச்சுமாகத் துலங்கி வருபவர்கள். கிழவிகளுக்கு என்ன புதுமை வேண்டியிருக்கிறது என்கிறீர்களா? ஏன் வேண்டியிருக்காமல்? நாற்பது வயதானவர்களைப் பார்த்தால் அவர்கள் வயதை அறிந்துகொள்ள முடிகிறதா? அஜந்தாக் கொண்டை யென்ன? சந்தனப் பவுடரின் மணமும், சருகுச் சேலையும் கட்டிக் கொண்டு தங்கள் வயதில் பாதியைக் குறைத்துக் கொள்ள அவர்கள் படுகிற பாடு சொல்லத்தரமன்று.

கிழவிகள் இரண்டு பேருமே ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள். எதிர் எதிர் வீட்டைச் சேர்ந்தவர்கள். ஊரின் நடு மையத்தில் அமைந்திருந்த ஆலயத்தின் மகோன்னத காலத்தைப் பார்த்தவர்கள். நாலு கால பூஜை யென்ன? தைப்பூசம், மாசி மகம், திருவாதிரை உற்சவங்களின் கோலாகலங்களைக் கண்டு களித்தவர்கள். தினம் தவறாமல் மாலை நேரங்களில் அந்தக் காலத்தில் இருவரும் கைகளில் எண்ணெய்க் கிண்ணங்களுடன் கோவிலில் ஆஜராகி விடுவார்கள். பிள்ளையார் சன்னிதி தொடங்கி நவக்கிரகங்கள் வரை இருவருமே ஒன்றாகச் சென்று வணங்கி விட்டுத் திரும்புகிற வழக்கம். இப்பொழுதும் கோவில் இருக்கிறது. அந்த நாட்களின் வழக்கங்கள் இல்லை. குருக்களுக்கு வரும்படி போதவில்லையாம். எட்டுக் கோவில்களில் பூஜையாக வேண்டும். இங்கே சிவன் தலையில் தண்ணியை ஊற்றி விட்டு, அடுத்த தெரு விநாயகருக்குச் சதுர்த்தி அபிஷேகத்துக்கு ஓடிப் போய் விடுவார். இரவிலோ அடுத்த ஊர் மாரியம்மனுக்கு அலங்காரம் செய்தாக வேண்டும். பாவம், அவர்தான் என்ன செய்ய முடியும்? குடும்பத்தைக் கட்டி மேய்த்தாக வேண்டாமா?

வழக்கம்போல் கிழவிகள் கோவிலுக்குப் புறப்பட்டார்கள். ஸ்வாமி தரிசனம் முடிந்ததும் ஆற்றோரமாக நடந்து ஆற்றங்கரை மண்டபத்தில் போய் உட்கார்ந்தார்கள். குமரிகள்தான் உலாவப் போக வேண்டும் என்பதில்லை. கிழவிகளாகிய இந்த லக்ஷ்மியும், சீதாவும் உலாவப் போகலாம். ஆற்றில் தண்ணீர் அதிகம் இல்லை. மழையும், பனியும் போய் இளவேனில் ஆரம்பமாகி யிருந்தது. படிகளில் பொங்கி ஓடிய நீர் இப்



போது அமைதியுடன் சலசலத்துக் கொண்டிருந்தது. லக்ஷ்மியும் சீதாவும் மண்டபத்தில் போய் உட்கார்ந்தார்கள்.

''அப்பவில் காலைப் பறித்துக் கொண்டு ஓடித்தே சீதா. இப்போ பார்த்




தியா ?'' என்று வியந்தாள் லக்ஷ்மி.

''கல்யாணத்துக்கு இருக்கிற இளம் பெண் மாதிரி ஒரே ஓட்டமும் பிடியுமாக ஓடித்து இந்த ஆறு. அப்புறம் கல்யாணமாகி நாலு குழந்தைகளுக்குத் தாயாகி விட்ட பெருமையில் அமைதி நடை போடுகிற மாதிரி இப்போ நடை பழகுகிறதடி லக்ஷ்மி!'' விழிகள் இரண்டு பேரும் இரண்டு கை நீரை அள்ளிக் குடித்தார்கள்.

கதிரவன் மலை வாயிலுக்குப் போக நேரம் இருந்தது. இருட்டுவதற்கு முன் கீழ் வானத்தில் நிலவும் முளைத்து விடும். ஊர்க் குழந்தைகள் மணலில் சடுகுடு விளையாடிக் கொண்டிருந்தார்கள். பாலத்தின் மீது காலத்துக்கேற்றாற்போல் பல இனிமையான காட்சிகள். அவற்றினூடே ஒன்று மட்டும் 'பளிச்'சென்று தெரிந்தது. வாலிபன் ஒருவன் 'டிரான்ஸிஸ்டர்'ரைப் பாட விட்டபடி பாலத்தின் மீது சாய்ந்து கொண்டிருந்தான். அடிக்கடி அவன் பார்வை கரையை நோக்கியது.

தூரத்திலே பெண்ணொருத்தி துள்ளி ஓடி வந்தாள். இருவரும் பேசுகிறார்கள் போலும். ஆற்றங்கரையிலிருந்த குழந்தைகள் வீடு நோக்கிப் போன பிறகும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''சீதா! உனக்கு அவர்களைப் பார்த்தால் என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டாள் லக்ஷ்மி. லக்ஷ்மிக்குச் சீதாவைவிட நாலைந்து வயது அதிகமாக இருக்கக் கூடும். கண் பார்வை மங்கலாகத் தெரியும். கண்களை இடுக்கி அவ்விருவரையும் கவனித்தாள்.

''ஒன்றும் தோன்றவில்லை'' என்று பளிச்சென்று பதிலிறுத்தாள் சீதா.

''அந்தப் பெண்ணும், பையனும் கல்யாணம் ஆனவர்களாக இருந்தால் குற்றமில்லை. இல்லாவிட்டால்?.....''

''இல்லா விட்டால் என்னவாம்?''

''வீண் அபவாதமும், பழியும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.''

''அபவாதமும், பழியும் வரும் என்று அவர்களுக்குத் தெரியாதா என்ன? தெரிந்திருக்கும். அதுவும் முன்னேற்றம் என்று முழங்கும் இந்தக் காலத்தில் அறிவு முன்னேறியிருக்கும் இந்த நாட்களில் இம்மாதிரி விஷயங்களை ஒரு முறைக்கு இரு முறை யோசனை செய்து தான் செய்வார்கள்.....'' என்று சற்றுக் காரமாகவே சொன்னாள் சீதா.

லக்ஷ்மி தன்னில் தான் லயித்தபடி உட்கார்ந்திருந்தாள். எத்தனையோ வருஷங்கள் ஓடி விட்டன. அந்தச் சம்பவம் ஒரு கனவைப் போல — மறந்து விட்ட எண்ணத்தைப் போல் — அவள் நினைவில் தோன்றியது. பாலத்தின் மீது நிற்கிறாளே அந்தப் பெண்ணின் வயதுகூட இருக்காது லக்ஷ்மிக்கு. இந்தக் காலத்தைப் போல் குதிரைவால் கொண்டை போடத் தெரியாது. வழுக்கும் நைலக்ஸ் சேலை உடுத்தும் பழக்கமும் இல்லை. தலையை நேர் வகிடு எடுத்து இழைய வாரி விட்டிருப்பாள். காதுகளில் பட்டைச் சிவப்புக் கம்மல்கள். ஆரணியோ, காஞ்சீபுரமோ நினைவில்லை. அந்த ஊரின் பட்டுப் பாவாடை. பாலத்தின் மீது நிற்கும் பெண்ணைவிட இரண்டு மூன்று வயசு குறைவாக இருக்கும். பெண்கள் இரண்டாவது மூன்றாவது படிப்பதே அதிகம் என்று நினைத்த காலம். லக்ஷ்மிக்கு அந்த நாட்களில் நாடகப் பைத்தியம் அதிகமாக இருந்தது. சினிமா வராத காலமாயிற்றே. இப்பொழுது சினிமா பைத்தியம் பிடித்து அலைகிற காலம். வீடு, வாசல், குடும்பம், குழந்தை எல்லாவற்றையும் விட்டு விட்டு முப்பத்தியோராம் தேதிகூட மாட்னி ஷோவில் பெண்கள் அடித்துப் பிடித்துக் கொண்டு ஆட்டம் பார்க்கச் சுதந்திரம் வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால், அந்த நாட்களில் கலையார்வம் ஆண்களுக்கு மட்டுமே உரிமையாக்கப்பட்டிருந்தது. பெண்கள் நினைக்க முடியாத ஒன்று. லக்ஷ்மிக்கு வெகு நாட்களாக நல்ல நாடகமாக ஒன்று பார்த்துவிட வேண்டும் என்று ஆசை. வீட்டிலிருந்து அவள் தந்தை அடிக்கடி நாடகத்துக்குப் போய் வருவார். நாடக மேடையில் தலைமை வகிப்பார். வீட்டுக்கு ரோஜா மாலைகளாகக் கொண்டு வருவார். அவள் ராஜபார்ட்டைப் புகழ்வார். ஸ்திரீபார்ட் போட்டவனின் தளுக்கு மினுக்குகளையெல்லாம் மனத்துக்குள் ரசித்துக் கொண்டிருந்தாலும் மனைவியின் எதிரில் வெறுப்பவர்போல் பாசாங்கு செய்வார்.

லக்ஷ்மியின் வீட்டார் ஆண்டுதோறும் சித்ரா பௌர்ணமிக்குப் பாலாற்றில் நடக்கும் திருவூரல் உற்சவத்துக்குக் குதிரை வண்டியில் போய் வருவார்கள். வண்டியின் இருபுறமும் படுதாக்கள் தொங்குகிற வழக்கம். பெரிய மனிதர்கள் வீட்டுப் பெண்கள் அப்படித்தான் பத்திரமாகப் போய் வருவார்கள். பத்திரம் என்பது வெளித் தோற்றத்தில்தான் இருந்தது. மனத்துக்குக் காவல் இருந்ததா என்பதைப் பற்றி யாரும் கவலைப்படவில்லை.

லக்ஷ்மியின் வீட்டிலே ஒரு ராயர் சமைத்துக் கொண்டிருந்தார். அவர் பிள்ளையும் லக்ஷ்மியின் வயதுள்ளவன். எடுபிடி காரியங்களுக்காக லக்ஷ்மியின் தகப்பனார் அவனையும் தம்முடன் வைத்துக் கொண்டிருந்தார். பையன் விகல்பமானவன் இல்லை. அப்படியெல்லாம் எண்ணக் கூடிய வயதும் அவனுக்கு ஏற்படவில்லை.

அந்த ஆண்டு சித்ரா பௌர்ணமியின் போது ஆற்றில் திருவிழா நடந்து கொண்டிருந்தது. ஊருக்குள் சத்தியவான் சாவித்திரி பிரபல நாடக கோஷ்டியினரால் நடத்த ஏற்பாடாகியிருந்தது. சுவரொட்டிகளுக்காகக் காசைக் கரியாக்க மாட்டார்கள். ஆகவே, ஆபாசம் இல்லாமல் தமுக்குப் போட்டு நாடகத்தைப் பற்றிக் கண்ணியமாகவே அறிவித்திருந்தார்கள். லக்ஷ்மிக்குச் சுவாமி தரிசனத்தில் மனம் செல்லவில்லை. வருஷா வருஷம் நினைவு தெரிந்த நாட்களாகப் பார்த்த சுவாமிதானே?

ராயர் பிள்ளை விட்டல் கண்டிப்பாக நாடகத்துக்குப் போவான் என்பது லக்ஷ்மிக்குத் தெரியும். அன்று வீட்டில் சாதாரணச் சமையல். மைசூர் ரசம், சுட்ட அப்பளம். உற்சவத்தில் பிரசாதங்கள் கிடைக்கும் என்கிற எண்ணத்தில் லக்ஷ்மியின் தாய் சாதாரணமாகவே ராயரைச் சமைக்கச் சொல்லியிருந்தாள். சாப்பாடு முடிந்து விட்டது. விட்டல் பின்கட்டில் தன் அறையில் தலை சீவி, துவைத்த வேஷ்டியை உடுத்திச் சொக்காய் அணிந்து கொண்டிருந்தான். கொஞ்சம் பவுடர் போட்டுக்கொள்ள ஆசை. லக்ஷ்மியைக் கேட்டால் கொடுப்பாள். அவன் கேட்பதற்கு முன்பே லக்ஷ்மி பவுடர் டப்பியுடன் அங்கு வந்தாள். உற்சவத்துக்குக் கிளம்புவதற்காக அவளுக்கு ராக்கோடி, ஜடை பில்லை, குஞ்சலம் வைத்துப் பின்னியிருந்தார்கள். தலை நிறைய மல்லிகையும், இருவாட்சியும் மணம் வீசின. கச்சிதமான அலங்காரங்களுடன் தன் எதிரில் நிற்கும் லக்ஷ்மியை விட்டல் பார்த்தான். தெய்வத் திருவுருவம்போல் நின்று கொண்டிருந்த அவள் எழிலை அப்படியே பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்ன விட்டல்? நாடகத்துக்குப் போகிறாயா? பவுடர் வேண்டுமா?''

விட்டல் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். அற்ப ஆசைதான் என்றாலும் சில சமயங்களில் அதுவே முக்கியமான ஆசையாகவும் ஆகி விடுகிறதல்லவா?

''இந்தா! பூசிக்கோ'' என்று மேஜை மீது பவுடர் டப்பாவை வைத்தாள். 'யார்ட்லி லாவண்டரின்' வாசனை புகைபோல் அறை முழுதும் கமழ்ந்தது.

''விட்டல்! உன்னை ஒன்று கேட்கிறேன். உம்மென்று சொல்லணும். என்னையும் நாடகத்துக்கு அழைத்துப் போ, விட்டல்.... எனக்கு ரொம்ப நாட்களாக நாடகம் பார்க்கணும்னு ஆசை, விட்டல்....''

விட்டல் லக்ஷ்மியைப் பார்த்தான். ''உன்னையா? நீ அப்பா, அம்மாவுடன் சுவாமி பார்க்கப் போகலே?'' என்று கேட்டான்.

லக்ஷ்மி தலையைப் பலமாக ஆட்டினாள். அவள் காதுகளில் இருந்த ஜிமிக்கிகள் அசைந்தன. தலைப் பின்னலும் ஆடியது.

''சுவாமி பார்த்துப் பார்த்து அலுத்துப் போச்சு விட்டல். வருஷா வருஷம் பார்க்கிற சுவாமிதானே?''

இருவரும் சிறு வயதினர். மிகச் சிறிய வயதினர். மனத்தில் தோன்றும் ஆசைகளுக்கு அணை போடவோ, தடுத்து நிறுத்தவோ முடியாத வயதினர்.

லக்ஷ்மியின் தாய் சுவாமி புறப்பாடு, நேரம் கழித்துத்தான் ஆகுமென்று நினைத்து ஒரு குட்டித் தூக்கம் போடப் போய் விட்டாள். அப்பா வழக்கம் போல் தம் ஜமாவுடன் சீட்டாடப் போயிருந்தார்.



''அதோ பாருடா ஹார்பர்! அங்கே பார். சென்ட்ரல்! அது தான் எல். ஐ. சி! இதோ இங்கே தான் மயிலை கபாலி கோயில்! அது மௌண்ட்... என்னடா இது? நான் பாட்டுக்குக் காட்டிண்டிருக்கேன். நீ என்ன பார்க்கிறே?''

''இதோ, லஸு பஜாரிலே எத்தனை ரெட்டைப் பின்னல். தெரியுது பாருப்பா!''

''ராயரே!'' என்று கர்ஜித்தார் லட்சுமியின் தகப்பனார்.

''எங்கேய்யா உம் பிள்ளை?''

''இங்கேதான் ஸ்வாமி இருந்தான்...''

''இங்கேதான் இல்லையே ஐயா?''

ராயர் கையைப் பிசைந்தார். பையனுக்கு நாடகப் பைத்தியம். அத்துடன் லட்சுமிக்கும் அதே பைத்தியம் பிடித்திருந்தது என்று சொல்ல அவருக்குப் பயம்.

''ராயரே! உம்மைப் பூண்டோடு ஒழித்து விடுவேன். இதென்னய்யா அவமானம்?''

''சுவாமி! சுவாமி! பெரிய பேச்செல்லாம் பேசாதீர்கள். விட்டலுக்கு நாடகப் பைத்தியம். நம்ம குழந்தையை அவன் அழைத்துப் போயிருக்கலாம்....''

விட்டலும் லக்ஷ்மியும் நாடகக் கொட்டகைக்குப் போனார்கள். குஷ்ர நாலணா என்கிற அறிவிப்பைப் பல முறைகள் தமக்கு வாயிலாகக் கேட்ட லட்சுமி தான் கொண்டு வந்திருந்த நாலணாவை விட்டலிடம் கொடுத்தாள்.

லட்சுமி டிக்கட்டை வாங்கிக் கொண்டு பெண்கள் உட்காருமிடத்துக்குப் போய் உட்கார்ந்தாள். விட்டல் வழக்கம்போல் ஆண்கள் பகுதியில் உட்கார்ந்தான்.

இங்கே ஆற்றங்கரை மண்டபத்தில் உட்கார்ந்திருக்கும் லட்சுமிப் பாட்டிக்கு அந்தக் காலத்துச் சத்தியவான் — சாவித்திரி மனக்கண் முன்பு தோன்றினார்கள். காலம் எதுவாக இருந்தால் என்ன? அந்த ஆதர்ச தம்பதிகளுடைய நெறியும், கற்பும் எந்தக் காலத்திலும் நிலைத்து நிற்கக் கூடியதல்லவா? தற்காலத்தைப் போல மேக்கப் வசதிகளோ, லைட் வசதிகளோ இல்லாத காலத்திலும் சத்தியவான் வேடதாரி நன்றாகப் பிரகாசித்தார். சாவித்திரியும் நன்றாகத்தான் இருந்தாள். எந்த விதமான புரட்சிக் கருத்துக்களோ, பழமையைத் தேய்த்துத் துலக்க முற்படும் புதுமைப் பிரசாரங்களோ நாடகத்தில் இல்லை. பகவான் வேத வியாசர் மகாபாரதத்தில் அருளியிருக்கிறபடி நாடகம் கிராமியத் தமிழில் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

இரவு மணி பன்னிரண்டு. வாசலில் லட்சுமி வீட்டு வண்டிக்காரன் வண்டி கட்டிக்கொண்டு வந்து நிறுத்தினான். லக்ஷ்மியின் தாய் மகளை வீடு முழுதும் தேடினாள். பதைத்தாள். அண்டை அயலார் என்னவோ என்று கூட்டமாகக் கூடிவிட்டனர். ராயரும் தலையில் அடித்துக்கொண்டு மகனைத் தேடினார்.

ஆற்றங்கரை மண்டபத்தில் லட்சுமிப் பாட்டி தன் உடலை ஒரு தரம் சிலிர்த்துக் கொண்டாள். அன்று தன் தாயிடம் விட்டல் பட்ட அடிகளும், குற்றத்தைத் தன்மீது சுமத்தாமல் அவனே ஏற்றுக்கொண்டதும், குற்றமே இல்லாத ஒன்றைக் குற்றமாக எண்ணிய ஊராரின் ஏச்சுக்களும் பாட்டியின் உடலில் சிலிர்ப்பை ஏற்படுத்தின.

''என்னடி லட்சுமி! குளிருகிறதா? கௌம்பு போவோம்'' என்றாள் சீதா.

லட்சுமியும் சீதாவும் புதுப் பாலத்தின் மீது நடந்து வந்து கொண்டிருந்தார்கள். யுவனிடம் யுவதி கூறுகிறாள்:

''இதோ பாருங்க, கலையார்வம் காரணமாகத்தான் நான் உங்களோடு நாடகம் போட வருகிறேன்னு சொல்றேன். அதை எங்க வீட்டார்தான் புரிஞ்சுக்கலே. நீங்களும் தட்டிக் கழிக்கப் பார்க்கிறீங்களே...''

''கலையார்வத்தின் விளிம்பில் நாம் நிற்பதை இந்த மக்களால் உணர முடியவில்லை, பிரேமா. பழங் காலத்திலேயே உன் பெற்றோர், என் பெற்றோர் இருக்கிறாங்க. நாளைக்கு ஏதாவது வம்பா முடிஞ்சா என்ன பண்றது சொல்லு...''

''லட்சுமி! அந்தப் பெண் யாரடி? உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள் சீதா.

''கலைக்குச் சேவை செய்யப் புறப்பட்டிருக்கும் கலாதேவியாக இருப்பாள் சீதா. இந்த வம்பெல்லாம் நமக்கு வேண்டாம்...'' என்றவாறு லட்சுமி எட்டி நடந்தாள்.

கோயில்களும் மாறிவிட்டன. பஜனை, நாதஸ்வரம், பரதம், சங்கீதம், முதலியவைகள் ஒலிக்க வேண்டிய கோயிலிலிருந்து கர்ண கடூரமான சினிமா சங்கீதம் காற்றில் தவழ்ந்து காதுகளில் மோதியது.

'எனக்கும் பதவி உயர்வு
கிடைத்திருக்கிறது!
இப்போது நான்
சூபரின்டன்டின் உறுதுணை'

# ஹெர்குலிஸ்

வெறும் சைக்கிள்
மட்டுமன்று—
வாழ்நாள் முழுதும்
உழைக்கும் ஓர் உறுதுணை



அவர்களுக்கு—ஹெர்குலிஸுக்கும் அதன் சொந்தக்காரருக்கும்—பதவி உயர்வு கிடைத்தது நியாயமே. எத்தனை வருடக் கடினமான உழைப்பு!

நீங்கள் ஒரு ஹெர்குலிஸ் சைக்கிள் வாங்கும்போது உங்கள் வாழ்க்கையுடன் அது ஒன்றிவிடுகிறது. ஆண்டுகள் செல்லச் செல்ல உங்கள் வாழ்க்கை மாறும் ... உத்தியோக உயர்வுகள் கிடைக்கும்...உங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாவார்கள். ஆனால் உங்கள் ஹெர்குலிஸ் எப்போதும் உங்களுடனேயே இருக்கும்—எப்போதும் நன்கு பணி புரிந்தபடி இருக்கும்.

டி.ஐ.சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா, அம்பத்தூர்,
மதராஸ்.53

உரிமையாளர்கள் :
டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா
லிமிடெட், சென்னை

JWT-TIC-H-2961a

# மாறுட்டம் எதில்?

அன்புள்ள காந்தி அவர்களுக்கு,

முன்பின் தெரியாத என்னிடமிருந்து கடிதம் வருவது உங்களுக்கு வியப்பளிக்கக் கூடும்; விளக்கினால் நான் கடிதம் எழுதிய காரணம் புரியும். இத்துடன் நீங்கள் 'முகில்' பத்திரிகைக்கு அனுப்பிய கதையை அடக்கம் செய்திருக்கிறேன். அதே பத்திரிகைக்கு நான் அனுப்பிய என் முதல் கதை திருப்பி அனுப்பப்பட்டதுடன், உங்களுடைய இந்தக் கதையும் எப்படியோ தவறுதலாக இணைக்கப்பட்டு விட்டது; ஆவலைக் கட்டுப்படுத்த இயலாமல் நான் அந்தக் கதையைப் படித்து விட்டேன்; மன்னிக்கவும்.

அதைத் திரும்பவும் 'முகில்' பத்திரிகைக் காரியாலயத்துக்கு அனுப்பி, அவர்கள் தவறுதலாக என் முகவரிக்குக் கதையை அனுப்பி விட்டதைச் சுட்டிக்காட்டி, அவர்களையே உங்கள் முகவரிக்குக் கதையை அனுப்பச் செய்வதைவிட, நேராக நானே உங்களுக்கு அனுப்பினால், விரைவில் நீங்கள் மற்றொரு பத்திரிகைக்கு அனுப்பலாம் என்ற எண்ணத்தில் உங்களுக்கே அனுப்பிவிட்டேன்;

'காந்தி' — என்ற உங்கள் பெயர் எழுத்தாளர் உலகில் புதிதாகத் தோன்றுவதால், இதுதான் நீங்கள் எழுதிய முதல் கதை என்று எண்ணுகிறேன். என் அனுமானம் தவறானால் மன்னிக்கவும்.

இப்படிக்கு,

எழுத்தாளர் உலகில் புகுமுயற்சிசெய்யும்

மணி

அன்புள்ள மணி அவர்களுக்கு,

உங்கள் கடிதமும், என் கதையும் வந்து சேர்ந்தன. கதையை அக்கறையுடன், பத்திரமாக எனக்குத் திருப்பியனுப்பிய உங்களை எப்படிப் பாராட்டுவதென்று தெரியவில்லை. உங்கள் கைபட்ட 'ராசி'யோ.... அல்லது உங்கள் 'அதி.....யோ' — தெரியவில்லை, என்னுடைய அந்தக் கதையை ''இமயம்'' பத்திரிகை ஏற்றுக் கொண்டு விட்டது. கதை வெளிவந்ததுகூட எனக்கு அதிக மகிழ்ச்சியில்லை. அது நன்றாக இருக்கிறது என்று நீங்கள் பாராட்டி எழுதியிருந்ததுதான் எனக்கு அதிக இன்பத்தை அளிக்கிறது... உங்கள் அனுமானம் சரியே..... இதுதான் என் முதல் கதை.

இந்த வாரம் ''பாமினி'' — இதழில், ''மணி'' என்ற பெயரில் ஒரு கதை பிரசுரமாயிருக்கிறது. அது நீங்களாகத்தான் இருக்கும் என்று என் மனம் கூறுகிறது. உங்கள் அனுமானம் தவறாதது போலவே என் அனுமானமும் தவறாக இருக்கக் கூடாதென்று இறைவனை வேண்டுகிறேன்.

உங்கள் 'கைராசி'யில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. ஆகையால் அடிக்கடி அந்த அதிர்ஷ்டக் கையினால் எனக்குக் கடிதங்கள் எழுதப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

காந்தி

கோவை

..........

அன்புள்ள காந்தி அவர்களுக்கு,

ஏதோ நான் செய்த ஒரு சிறு செய்கை இவ்வளவு பெரிய பாராட்டுதலுக்குரியதாகும் என்று நான் கனவில்கூட எண்ணவில்லை. நான் உங்களுக்குக் கடிதம் எழுதின



போது பதில் வரக் கூடும் என்று சிறிது கூட எதிர்பார்க்கவில்லை. ஆகையால் உங்கள் கடிதம் என்னை மகிழ்ச்சிக் கடலில் மூழ்கடித்து விட்டது என்று சொன்னால் மிகையில்லை.

உங்கள் அனுமானமும் சரியே! என் முதல் கதையே, 'பாமினி' பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டுள்ளது. இனிமேல் வாசகர்கள் 'காந்தி' என்ற பெயரை அடிக்கடி பத்திரிகைகளில் பார்ப்பார்கள். என்னைப் பொறுத்த வரையில் இதுவே என் முதல்—கடைசிக் கதை யாக இருக்கக்கூடும். ஏனெனில், என் கற்பனை விதை வளமான பூமியில் பயிரிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. முளை விட்டிருப்பது என்னவோ உண்மை. ஆனால் வளர்வதற்கு வேண்டிய மற்ற வசதிகள் இருப்பதாகத் தெரியவில்லை. ஆசைக்கு ஒன்று எழுதினேன். அச்சிலும் ஏறி விட்டது. ஆசையும் தீர்ந்தது. ஆனால் உங்கள் முதல் கதையின் 'தரமே' உங்கள் கற்பனைப் பயிர் செழித்துத் தக்கசமயம் அறுவடைக்குத் தயாராக இருக்கிறதென்று கட்டிக் காட்டுகிறது. 'மள மள' வென்று அறுவடை செய்ய வேண்டியதுதான் பாக்கி.

உங்கள் கதை, எனக்கு உங்களை அறிமுகப் படுத்தி விட்டது. நீங்கள் உங்கள் — என்றெல்லாம் உங்கள் கடிதத்தில் எனக்கு மரியாதை கொடுக்கப்பட்டிருப்பது என்னைக் கூசச் செய்கிறது. கண்டிப்பாக நீங்கள் என்னைவிட வயதில் பெரியவராகவே இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. என் வயது இருபது. உங்கள் வயதென்ன என்று கேட்பது அநாகரிகம். நீங்கள் எழுதும் பதில் கடிதத்தில் நீ—உனது என்ற வார்த்தைகள் இருந்தால் என்னை விட நீங்கள் மூத்தவர் என்று நிச்சயப்படுத்திக் கொள்வேன்.

முதல் கடிதத்துக்குப் பதில் எதிர்பார்க்கவில்லை. எதிர்பாராமல் எழுதி மகிழ்வித்தீர்கள். இந்தக் கடிதத்துக்கு ஆவலுடன் உங்கள் பதிலை எதிர்பார்க்கிறேன். ஏமாற்றத்துக்குள்ளாக்காதீர்கள்.

இப்படிக்கு,
மணி

சேலம்
.........

அன்புள்ள மணி !

நீ பெரிய 'தீர்க்கதரிசி' என்பதில் எனக்குத் துளிக்கூட சந்தேகமில்லை. நான் உன்னை எட்டு வருடங்கள் முந்திக் கொண்டுதான் பிறந்திருக்கிறேன். இருந்தாலும் புதிதாக அறிமுக

## எஸ்.பத்மாவதி



மாணவர்களுக்கு நீங்கள்—உங்கள்—என்று மரியாதை கொடுப்பது தானே முறை? ஆனாலும், உன் விருப்பத்தை மீற முடியாமல் 'ஏக வசனத்தில்' உன்னை அழைப்பதற்குக் காரணம், என்னையறியாமல் உன் மேல் எனக்கு ஏற்பட்டுள்ள 'அன்பு' என்று தான் சொல்ல வேண்டும். நீ என்னை வானளாவப் புகழ்ந்திருக்கிறாய். அதற்கான தகுதி துளிகூடக் எனக்கிருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் உன் போன்றவர்களின் நல்லெண்ணமே—எனக்குப் பத்திரிகை உலகில் நல்ல எதிர்காலத்தைக் கொடுக்கும் என்று நம்புகிறேன்.



''என்னமோ நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டேன். பிறகு உங்களிஷ்டம்... .''

'என்னதான் சொல்றியோ?'

''நான் குட்டிக் கண்ணனைக் குளிப்பாட்டுகிறேன். நீங்கள் சந்திரா, ராதா, கலா மைதிலிக்கு தலையை வாரிப் பின்னி அனுப்புங்க. ஸ்கூலுக்கு நாழியாகிவிடும்.''

கடிதம் மூலம் இவ்வளவு நெருங்கிய பிறகு நாம் இருவரும் பரஸ்பரம் ஒருவரைப் பற்றி ஒருவர் அறிந்து கொள்ளுவது நலம் என்று எண்ணுகிறேன். என் பெற்றோருக்கு நான் ஒரே வாரிசு. பி.எஸ்ஸி. படித்திருக்கிறேன். ஒரு காரியாலயத்தில் டைப்பிஸ்டாக வேலை பார்த்து வருகிறேன். ஒழிந்த நேரங்களில் கதை எழுதுவது என் பொழுதுபோக்கு.

நம் நட்பு மேன்மேலும் வளர வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறேன். உன்னைப் பற்றியும் நிறைய எழுது. அடுத்த வாரம் ஒரு வார லீவில் வெளியூர் செல்லுகிறேன். சந்தர்ப்பம் நேர்ந்தால் உங்கள் ஊருக்கும் வரக் கூடும். அப்பொழுது நேரில் வந்து உன்னை சந்திக்க முயற்சிசெய்கிறேன். பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

காந்தி

கோவை

அன்புள்ள காந்தி அவர்களுக்கு,

உங்கள் கடிதம் பார்த்து மகிழ்ந்தேன். உங்களுக்கும், எனக்கும் பல விஷயங்களில் ஒற்றுமை இருப்பதைப் பார்த்து ஆச்சரியமடைந்தேன். நானும் என் பெற்றோருக்கு ஒரே 'வாரிசு'. பி. ஏ. படித்திருக்கிறேன். நானும் ஒரு காரியாலயத்தில் டைபிஸ்டாக வேலை பார்க்கிறேன் என்றால் ஆச்சரியமாயில்லை? என் பொழுதுபோக்கு புத்தகம் படிப்பது. உங்களை நேரில் பார்க்க வேண்டுமென்று நானும் துடித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் நீங்கள் இந்த ஊருக்கு வரும்போது நான் இருக்க மாட்டேனே என்று எண்ணும்போது ஏமாற்றமாக இருக்கிறது: அடுத்த வாரம் என் பெரியப்பா பிள்ளைக்கு நடக்கும் கல்யாணத்துக்காக 'ஈரோடு' செல்கிறேன். உங்களைச் சந்திக்கும் சந்தர்ப்பத்தை இழப்பது பெரிய துரதிருஷ்டமாகத் தோன்றுகிறது. இருப்பினும் அடிக்கடி உங்களைக் கடிதம் மூலம் சந்திப்பேன் என்று உறுதியளிக்கிறேன்.

உங்கள் பிரியமுள்ள

மணி

சேலம்

.........

அன்புள்ள மணி!

என்ன ஒற்றுமை நமக்குள்! நானும் 'ஈரோட்டி'ல் நடக்கும் என் மாமா பெண் கல்யாணத்துக்காகத்தான் ஒரு வாரம் லீவில் வெளியூர் செல்வதாக எழுதியிருந்தேன். கல்யாணம் முடிந்த பிறகு அடுத்த நாள் கோவை வந்து உன்னைச் சந்தித்து விட்டுத் திரும்ப எண்ணினேன். ஒருவேளை நீ வருவதும் நான் வருவதும் ஒரே கல்யாணத்துக்காக இருக்குமானால் நாம் அதிருஷ்டசாலிகள். என் மாமா பெயர் விசுவநாதன். பெண் பெயர் லீலா. உடனே விவரம் தெரிவிக்கவும்.

பதிலை எதிர்பார்த்துத் துடிக்கும்,

காந்தி

கோவை

.........

அன்புள்ள காந்தி அவர்களுக்கு,

என்ன ஆச்சரியம்! என் பெரியப்பா பிள்ளை சேகரன் உங்கள் மாமா விசுவநாதன் பெண் லீலாவைத்தான் மணக்கப் போகிறான்; இன்னும் நான்கு நாட்களில் உங்களைச் சந்திக்கப் போகிறேன் என்ற மகிழ்ச்சியில் எனக்கு எழுதவே கை ஓடவில்லை: கல்யாணத்தில் எவ்வளவு கூட்டமிருந்தாலும் யாரையும் விசாரிப்பதற்கு முன் நான் உங்களைக் கண்டு பிடித்து விடுவேன் என்று என் மனம் கூறுகிறது. மற்றவை நேரில்.

உங்களைப் பார்க்கத் துடிக்கும்

மணி

சேலம்

.........

மணி! மணி!

கடித மூலம் அறிமுகமான நமக்குள் ஏற்பட்ட 'நட்பு' முதலிலிருந்தே என் மனத்தில் புதிய கிளர்ச்சியை ஏற்படுத்தி விட்டது. நம் 'நட்பின் சக்தி' நாம் நேரில் விரைவில் சந்திக்கும் வாய்ப்பையும் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. கல்யாண வீட்டில் நுழைந்ததும் முதலில் உன்னையே தேடும் என் கண்கள்: ஒருவரையும் விசாரிக்காமலேயே நம் இருவருள் யார் மற்றவரை முதலில் கண்டுபிடிக்கிறோம் என்று பார்க்கலாம். மற்றவைநேரில்,

உன் அன்புள்ள

காந்தி

[பத்து தினங்களுக்குப் பிறகு]

சேலம்
........

அன்பே மணி!

இப்படி அழைப்பதற்கு மன்னிப்பாயா? 'மணி' என்ற பெயரைப் பார்த்து நான் உன்னை ஓர் ஆண் என்று எண்ணிக் கொண்டது போலவே 'காந்தி' என்ற பெயரைப் பார்த்து நீ என்னை ஒரு பெண் என்று ஏமாறக் கூடும் என்பது எனக்குத் தோன்றவேயில்லை. கலியாண வீட்டில் நான் ஆண்கள் கூட்டத்தில் உன்னைத் தேட, நீ பெண்கள் கும்பலில் என்னைத் தேடியிருக்கிறாய்! கடைசியில், பொறுமையிழந்து, நான் கலியாணப் பெண்ணுக்கு உனக்குள்ள உறவைச் சொல்லிப் பிள்ளை வீட்டுக்காரர் ஒருவரிடம் உன்னைப் பற்றி விசாரித்ததும் உன்னைச் சுட்டிக் காட்டினார்கள். அதே சமயத்தில் நீயும் சலித்துப் போய்ப் பெண் வீட்டாரிடம் விசாரித்திருக்கிறாய். என்ன ஒற்றுமை! இருவரும் ஒரே சமயத்தில் ஒருவரையொருவர் முதல் முறையாகப் பார்த்துக் கொண்டோம். உடனே என் உடலில் மின்சாரம் பாய்ந்த மாதிரி ஓர் உணர்ச்சி ஏற்பட்டது. நீயும் அதே அவஸ்தைக்குள்ளானாய் என்பதை உன் முகம் காட்டியது. நான் உன் பெயரைச் சொல்லி விசாரித்தது, உன் 'அப்பா'விடம் என்று பிறகு தெரிந்து கொண்டேன். இதிலும் நமக்குள்ள ஒற்றுமையைப் பார். நீ என்னைப்பற்றி என் அம்மாவிடமே விசாரித்திருக்கிறாய். கலியாணக் கும்பலில் உன் அப்பா தன் பெண்ணுக்கு ஒரு நல்ல பையனைத் தேடியது போலவே, என் அம்மாவும் தன் பிள்ளைக்கு ஒரு நல்ல பெண்ணைத் தேடியிருக்கிறாள். என் அம்மா உன்னைத் தேர்ந்தெடுத்து மெதுவாக உன்னைப் பற்றி விசாரிக்க உன்னிடம் வந்த போது நீ என்னைப் பற்றி அவளிடம் விசாரித்திருக்கிறாய். உன் தகப்பனார் என்னைத் தேர்ந்தெடுத்து விவரம் சேகரிக்க என்னை நெருங்கிய போது நான் உன்னைப் பற்றி அவரிடம் விசாரித்ததும் எல்லோரையும் தூக்கிவாரிப் போடச் செய்ததில் அதிசயமில்லை. அதிசயத்துக்கு மேல் அதிசயத்தைப் பார்த்த நமக்குஅவ்வளவு ஆச்சரியமளிக்காது. பெற்றோர்கள் புத்திசாலிகள். ஜாதகம் கைமாறியது.

என் அம்மாவுக்குத் தனக்கு ஒரு பெண் இல்லையே என்று ஒரு பெருங் குறை. என் பெயர் 'காந்தி நாதன்' என்று வைத்துவிட்டு அருமையாக 'காந்தி' என்றே அழைக்க அதுவே நிலைத்து விட்டது. ஆனால் இந்தப் பெயரினால் ஏற்பட்ட 'ஆள் மாறாட்டம்' எனக்கு ஒரு 'நாகமணி'யை அல்லவா தேடிக் கொடுத்திருக்கிறது!

கடிதத்தில் தைரியமாகப் பேசியவள் நேரில் நான் பேச வந்த போது ஏன் ஓடினாய்? அம்மா இன்னும் பதினைந்து நாட்களில், — 'முகூர்த்தம்' என்று சொன்னாள். இருந்தாலும் உன்னிடமிருந்து சம்மதம் என்று கடிதம் வந்தால்தான் இந்தக் 'காந்திக்குச் சாந்தி.....'

இப்படிக்கு,
(காந்தி) நாதன்



"வீட்டிற்குச் சுண்ணாம்பு அடிக்கணுமுங்களே?"

"அவசரப்படாதே! பிளாட் வாங்கி, அஸ்திவாரம் போட்டு, சிமெண்ட் பெர்மிட் வாங்கி, கடனும் கிடைச்சதானால் வீடு கட்டி முடிச்ச உடனேயே உன்னைக் கூப்பிடுகிறேன்!"

கோவை
.........

அன்புள்ள..........

நீங்கள் மிகவும் பொல்லாதவர். நம்மை அறியாதவர்கள் நம் பெயரினால் தடுமாற்றம் அடையக்கூடும் என்று நம் இருவருக்குமே தோன்றவில்லையே! நாம்தான் ஒற்றுமை என்றால் நமது அம்மாக்களும் கூட அல்லவா ஒற்றுமையாக இருந்திருக்கிறார்கள்! உங்கள் அம்மாவுக்கு எப்படிப் பெண் இல்லாத குறையோ அப்படியே என் அம்மாவுக்குப் பிள்ளையில்லாத குறை. நாகமணி என்ற பெயருள்ள என்னை 'மணி' என்று அழைக்கலானாள். அதுவே நிலைத்து ஒரு மணியான திட்டமாகி விட்டது. அது என்னை...... உம்.... உம்..... என் நாதனிடம் சேர்ப்பிக்கும் என்று எதிர்பார்க்கவே இல்லை! ஆமாம்! முன்போல் இனிமேல் கடிதம் எழுத முடியுமா? நீங்கள் ஆண் என்பதால் தைரியமாக எழுதி விட்டீர்கள். உண்மை தெரிந்த பிறகு நான் எழுதினால் நன்றாக இருக்குமா? இருந்தாலும் மனம் கேட்கவில்லை. எழுதி விட்டேன். இனிமேல் கடிதம் கலியாணத்துக்குப் பிறகுதான்!

குறும்புக்காரர்! சம்மதமா கேட்கிறீர்கள்? எப்படிச் சம்மதமளிப்பது? எனக்கே தெரியவில்லை என் நிலை. என் மனத்தைக் 'காந்தி' என்பவர் களவாடிச் சென்று விட்டார். தயவுசெய்து அவரிடம் விசாரித்து எனக்குத் தகவல் அனுப்புங்கள்.

இப்படிக்கு,
மணி

சேலம்
........

கண்மணி!

கலியாணத்துக்குப் பிறகுமா கடிதம் எழுதச் சொல்கிறாய்? 'மணி' இருக்கும் இடத்தில் 'காந்தி'யும்.... 'காந்தி' இருக்குமிடத்தில் 'மணி'யும் இருக்கும் என்பது உனக்குத் தெரியாத விஷயமல்லவே!

மற்றவை மண மேடையில்.

உன்
நாதன்

# பதவி ஏற்பு வைபவங்கள்

அமெரிக்க நாட்டின் முதல் ஜனாதிபதி ஜார்ஜ் வாஷிங்டன் (1789–1797) காலத்தில் தலைநகர் பிலடெல்பியாவில் இருந்தது. அவர் பதவிக் காலம் முடிந்து ஜான் ஆடம்ஸ் என்பவர் ஜனாதிபதியாக வந்தபோது (1797–1801) பின்னவருடைய பதவி ஏற்பு வைபவத்தில் ஜார்ஜ்வாஷிங்டனும் கலந்துகொள்ள விரும்பினார். ஜான் ஆடம்ஸுக்கு இந்த ஏற்பாடு திருப்தி அளிக்கவில்லை. அவர் அதை விரும்பவுமில்லை. காரணம் தாம் வாழ்க்கையிலேயே முக்கியத்துவம் பெறக் கூடிய அந்தத் தினத்தில் புகழ் பெற்ற மாஜி ஜனாதிபதியும் கலந்து கொண்டால் பொதுமக்களின் கவனம் அவர் பக்கம் இழுப்பித் தாம் ஒரு கவனிப்பாரற்ற நபராகப் போய்விடுவோமோ என்ற பயம்தான்!

ஆனால் வாஷிங்டன் விஷயத்தை இத்துடன் விட்டுவிடவில்லை. பதவி துறக்கும் ஜனாதிபதியும் கூட இருந்தால்தான், அவரும் அவர் கூட்டாளிகளும் புது ஜனாதிபதிக்கு ராஜ்ய அலுவல்களில் துணையாக நிற்பார்கள் என்ற நம்பிக்கை மக்களுக்கு ஏற்படும் என்று வற்புறுத்தி அந்த ஏற்பாட்டை அமலில் கொண்டு வரச் செய்தார்.

ஜான் குவின்ஸி ஆடம்ஸ் (1825–1829) என்ற பதவி துறந்த ஜனாதிபதிக்கும் ஆண்ட்ரூ ஜாக்ஸன் (1829–1837) என்ற பதவி புகுந்த ஜனாதிபதிக்கும் கடும் விரோதம். தாங்கள் இருவரும் சேர்ந்து பவனி வருவது என்பது கேலிக்கூத்தான விஷயம் என்றும் பொதுஜனங்களை ஏமாற்ற விரும்பவில்லை என்றும் முன்கூட்டித் தீர்மானித்து, மாஜி ஆசாமி தலைகாட்டவேயில்லை. இப்படியே அமெரிக்க சரித்திரத்தில் வேறு பல ஜனாதிபதிகளும் தனியாகப் பவனி வருவது என்று முடிவு செய்திருக்கிறார்கள். எனினும் பதவி ஏற்பு தினத்தில் பழைய புதிய ஜனாதிபதிகள் சேர்ந்து தெருக்களில் பவனி வருவதும் பதவி ஏற்பதைத் தொடர்ந்து, கேளிக்கை, விருந்து நாட்டியங்கள் வெள்ளை மாளிகையில் நடப்பதும் சம்பிரதாயம்.

ஆண்ட்ரூ ஜாக்ஸனுக்குக் கிடைத்த அனுபவம் பிரமாதமானது. அவருடைய ராஜ்ய பிரஜைகளும், அபிமானிகளும் வெள்ளை மாளிகையில் நடைபெற்ற தமாஷில் கலந்து கொள்ள ஆயிரக் கணக்கில் குறிப்பிட்ட நேரத்துக்கு முன் குழுமி விட்டதால் அவரால் உள்ளே போக முடியவில்லை. பின் பக்கத்துச் சுவர் ஏறிக் குதித்து அப்புறம் ஒரு பாதாள சாக்கடை மூலம் உள்ளே போய்ச் சேர்ந்தாராம்.

உள்ளே நிற்கக்கூட இடமில்லை. மேஜை நாற்காலிகளின் மீதெல்லாம் அபிமான விருந்தினர்கள் நின்று ஆனந்தத்தில் ஆழ்ந்திருந்தார்கள். பீங்கான்களும் கண்ணாடிகளும் உடைந்த கலகலப்பு தொடர்ந்து ஒலித்துக் கொண்டேயிருந்தது. கடைசியில் ஜாக்ஸனும் அவர் குடும்பத்தினரும் வந்த சுவடு தெரியாமல் வெளியேறி அந்த இரவை ஹோட்டல் ஒன்றில் கழித்து விட்டுச் சில நாட்கள் கழித்துத்தான் வெள்ளை மாளிகையில் குடியேறினார்களாம். விருந்தும் நடனமும் நடந்த மாளிகையைச் சீராக்க அத்தனை நாட்கள் தேவையாக இருந்ததாம்.

விருந்துக்கு வந்து தங்களை மறப்பவர்கள் அந்த மாளிகையில் அன்றிருந்து ஜனாதிபதி தங்கப் போகிறார் என்பதை மறந்தே போகிறார்கள். உட்ரோ வில்ஸன் (1913–1921) பதவி ஏற்ற தினத்தன்று அவருடைய ஆடைகள் வைக்கப்பட்டிருந்த பெட்டி இந்த அமளி துமளியில் காணாமலே போய் விட்டது. நீண்ட நேரம் தேடித் தோல்வியுற்று இடுப்பு சராயுடனேயே ஒரு மூலையில் படுத்து இரவைக் கழித்தார்.

ஆப்ரஹாம் லிங்கன் (1861–1865)- இரண்டாவது தடவையாகப் பதவி ஏற்றுப் பிரதிநிதிகள் சபைக்குள் நுழையும்போது தான் ஒரு வாலிபன் போலீஸ் காவலை மீறி அவரை நோக்கி ஓடி வந்தான். உடனே போலீஸார் அவனை வழிமறித்துப் பலவந்தமாக அந்தக் கட்டிடத்துக்கு வெளியே கொண்டுபோய் விட்டு வந்தார்கள். அவன் ஏன் அப்படி ஓடி வந்தான் என்று யாரும் விசாரித்துத் தெரிந்து கொள்வதில் அக்கறை காட்டவில்லை. ஆனால் சில வாரங்களில் அவனைத் தேடிக் கண்டுபிடிக்க நாடே அடி துடித்துக்கொண்டிருந்தது. அன்று ஓடி வந்த ஆசாமிதான் பிறகு ஆப்ரஹாம் லிங்கனைச் சுட்டுக் கொன்ற வில்கி பூத்!

அன்றே அவன் ஓடி வந்தபோது அவனைப் பிடித்து விசாரணைக்கு உள்ளாக்கி இருந்தால், லிங்கன் ஒரு வேளை அவனுடைய துப்பாக்கிக் குண்டிலிருந்து தப்பி நீண்ட காலம் வாழ்ந்திருக்கலாம்.

பொதுவாக, புது ஜனாதிபதி பதவி ஏற்றுக் கொண்டதும் பழைய ஜனாதிபதி உடனே வெள்ளை மாளிகையிலிருந்து கிளம்பிவிட வேண்டும் என்பது சம்பிரதாயம். ஆனால் உட்ரோ வில்ஸன் பதவி ஏற்ற பிறகு அவருக்கு முந்தியவரான ஹோவர்ட் டாஃப்ட் (1909–1913) இலேசில் வெள்ளை மாளிகையை விட்டுக் கிளம்பவில்லையாம்!

நான்கு தடவைகள் பதவிப் பிரமாணம் ஏற்கும் வாய்ப்பைப் பெற்றவர் ஃபிராங்களின் ரூஸ்வெல்ட்தான்! அவர் கடைசியாகப் பதவிப் பிரமாணம் செய்தபோது யுத்த காலத்தை அனுசரித்து எத்தகைய ஆடம்பரமும் கேளிக்கையும் இல்லாமல் பதவி ஏற்றுக்கொண்டார். — மேனு

(ஆதாரம்: காரனெட்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

SH82/NCB-80 S TAM

## சேமிப்பதைப்பற்றி வெறும் நினைப்பிலேயே மிகுந்த காலம் செலவிட்டு வருகிறீர்களா?

சிறுசேமிப்புகள் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கில் எப்பொழுதும் வரவேற்கப்படும். ஐந்தே ரூபாய்களைக் கொண்டு ஒரு சேமிப்புக் கணக்கு ஆரம்பித்து விடலாம்.

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கின் ஒவ்வொரு கிளையிலும் சூழ்நிலை சுமுகமாகவும், சேவைகள் நட்புரிமையுடனும் இருப்பதைக் காண்பீர்கள்.

எனவே உங்கள் அருகாமையிலுள்ள கிளைக்கு இன்றே விரைந்து செல்லுங்கள். எங்களிடம் ஒரு சேமிப்பு கணக்கு வைத்துக் கொள்வது எப்படி நிச்சயமாக ஆபத்சகாயமாக விளங்குமென்பதைப் பாருங்கள்.

**உங்கள் டிபாசிட் எவ்வளவு சிறியதாக இருப்பினும் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் உங்களுக்கு அளிக்கும் கௌரவம் பெரிது.**



## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

கிளைகள்: சென்னை: 3, நார்த் பீச் ரோடு, 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ ரோடு. (லாயிட்ஸ் கிளை) 6, அரமனைக்காரத் தெரு 158, மவுண்ட் ரோடு. தூத்துக்குடி: 44, பீச் ரோடு ஹைதராபாத்: அபித் ரோட்

REGISTERED No. M. 439
Registered as a Newspaper in Ceylon